நகுலசகாதேவர்

அருளிய

# அசுவசாஸ்திரம்



கிடைக்குமிடம்:

சரஸ்வதி புத்தகசாலை

நெ. 175.

செட்டியார் தெரு, கொழும்பு.

உ

கடவுள் துணை

நகுல சகாதேவர்

அருளிச்செய்த

# அசுவசாஸ்திரம்

இஃது

இராமநாதபுரம்

லேட் - பொன்னுசாமி தேவரவர்கள்

அரண்மனை ரைட்டர்

முத்துக்கருப்பபிள்ளை அவர்களால்

பல ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு

யாவரும் எளிதில் அறிந்துகொள்ளும் பொருட்டு

பிழையறச் சீர்திருத்தப்பட்டது.

---

பதிப்பாளர்:

அமரம்பேடு. குழந்தைவேல் முதலியார்

தெய்வமகள் விலாச அச்சுக்கூடம்

சென்னை

# காபிரைட் அறிவிப்பு



# அசுவ சாஸ்திரத்தின்

## பொருள் அட்டவணை



பொருள் அட்டவணை

முற்றிற்று.

உ

கடவுள் துணை

# அசுவ சாஸ்திரம்

## குதிரைகளின் பற்களால் ஆயுள் அறியும் மாத டாப்பு

| மாதம் | டாப்பு | ஷ | வியஞ்சனம் |
|---|---|---|---|
| 1 | முதற்கீட்பல்லிரண்டு முளைக்கத் துவக்கும் | 1 | ,, |
| 2 | மேற்படிபற்கள் பூரணமாகும் | 2 | ,, |
| 3 | நடுப்பல்லிரண்டும் முளைக்கத் துவக்கும் | 3 | ,, |
| 4 | மேற்படி பல்லிரண்டும் பூரணமாகும் | 4 | ,, |
| 5 | பாரிபட்சமென்கிற கடைப் பல் முளைக்கும் | 5 | ,, |
| 6 | மேற்படி பல் பூரணமாகும் | 6 | கிருட்டிணம் |
| 7 | நடுக்கீட்பல்லிரண்டும் வெண்மையாகும் | 7 | ,, |
| 8 | ஷை பற்களுக்கு மேற்பல்லிரண்டும் வெண்மையாகும் | 8 | ,, |
| | | 9 | அருணம் |

| மாதம் | டாப்பு | ஒரூப வியஞ்சனம் | |
|---|---|---|---|
| 9 | நடுக்கீட்பல்லிரண்டும் வெண்மையாகும் | 10 | ,, |
| 10 | நடுமேற்பல்லிரண்டும் வெண்மையாகும் | 11 | ,, |
| 11 | பாரிபட்ச மென்கிற கடைகீட்பல்லிரண்டும் வெண்மையாகும் | 12 | சுக்கிலம் |
| | | 13 | ,, |
| | | 14 | ,, |
| 12 | ஷை கடைமேற்பல் லிரண்டும் வெண்மையாகும் | 15 | காசம் |
| | | 16 | ,, |
| | | 17 | ,, |

# குதிரைகளின் பற்களால்
# ஆயுள் அறியும் வருஷ டாப்பு



| டாப்பு | | | ஹூ விபஞ்சனம் |
|---|---|---|---|
| கீழ்மேற் பன்னிரண்டுபற்களும் வெண்மையாகும் | | 18 | மட்சிகம் |
| ஷை பற்கள் பனிரண்டுங் காவி வர்ணமாகும் | | 19 | ,, |
| முதற்கிட்பல்லிரண்டும் | விழுந்துமுளை | 20 | ,, |
| நடுக்கிட்பல்லிரண்டும் | க்கும் | 21 | சங்கம் |
| பாரிபட்சமெனுங்கடைப் | | 22 | ,, |
| பல்லிரண்டுக்கும் | | 23 | ,, |
| முதற்பல்லிரண்டிலும் | கருப்புநிறமா | 24 | உலூகம் |
| நடுப்பல்லிரண்டிலும் | ய் நீண்டகோ | 25 | ,, |
| கடைப்பல்லிரண்டிலு | டாயிருக்கும் | 26 | ,, |
| முதற்பல்லிரண்டிலும் | மஞ்சள்நிற | 27 | கம்பம் |
| நடுப்பல்லிரண்டிலும் | மாய்த்தோ | 28 | ,, |
| கடைபல்லிரண்டிலும் | ன்றும் | 29 | ,, |
| முதற்பல்லிரண்டிலும் | விபுதிநிறத்தில் | 30 | பதனம் |
| நடுப்பல்லிரண்டிலும் | முக்கோணமா | 31 | ,, |
| கடைபல்லிரண்டிலும் | ய்க்காணும் | 32 | ,, |
| முதற்பல்லிரண்டிலும் நடுப்பல்லிரண்டிலும் கடைபல்லிரண்டிலும் | பச்சைநிறத்தி லறுகோணமாய்க்காணும் | | |
| முதற்பல்லிரண்டிலும் நடுப்பல்லிரண்டிலும் கடைப்பல்லிரண்டிலும் | மதுவர்ணமாகப் புள்ளி விழும் | | |

| டாப்பு | | ௵ வியஞ்சனம் |
|---|---|---|
| முதல்<br>நடுப்பல்லிரண்டிலும்<br>கடை | } | சங்குதுண்டுபோற் சவுக்கமாயிருக்கும் |
| முதல்<br>நடுப்பல்லிரண்டிலும்<br>கடை | } | பல் விலகிக்குழிவிழும் |
| முதல்<br>நடுப்பல்லிரண்டிலும்<br>கடை | } | அசைவு கொடுக்கும் |
| முதல்<br>நடுப்பல்லிரண்டிலும்<br>கடை | } | விழ ஆரம்பிக்கும். |

---

கடவுள் துணை

# அசுவ சாஸ்திரம்

## தேயங்களின் பயன்

1-வது இருகு தேயத்தில் இருகு அறபென்றும் இருகு அஜமென்றும் இரண்டு பிரிவுண்டு அதில் இருகு அறபெனும் பிரிவில் காஷ்கரெனும் பட்டணத்தைச் சேர்ந்த நசுதெனு மூரிற் ஜனிக்குங் குதிரைகளானது சகல தேசத்துக் குதிரைகளிலு மிகுந்த பிரபலமானதாயும், யோக்கியமான குதிரைகளுக்கு வேண்டிய சகல நற்குணங்களோடும் இந்திரியக்கட்டுள்ளதாயும், நல்ல நடத்தையை யுடையதாயும், குற்றமற்ற நடையை யுடையதாயும், காந்தியை யுடையதாயும், தயிரிய முள்ளதாயும், விவேக முள்ளதாயும், உயுத்தியங்களி லெதிர்த்தோடுஞ் சக்தியை யுடையதாயும் நன்றியறிதலாயும், தன் எசமானனைக் காபபாற்றுங் குணத்தை யுடையதாயும், சவாரி செய்பவன் சவாரிக்குத் தகுந்த நடையை யுடையதாயும், இன்ன மிதைப் போலொத்த அநேக நற்குணங்களைப் பொதிந்ததாயு மிருக்குமென்றும், ஆகையா லிந்தக் குதிரைக் கொப்பான குதிரைக ளில்லையென்றும், இன்னமும் இந்தக் குதிரைகளுக்கு வயது ஐம்பது அல்லது அறுபதுவரையி லிருக்குமென்றும், இதன் விலையை இவ்வளவென்று மதிக்கக்கூடாதென்றும் சாஸ்திரிகள் சாஸ்திரங்களிற் சொல்லி யிருக்கின்றார்கள்.

2-வது. இருகு அஜமெனும் பிரிவில் குளசா னென்கிற தேசத்துக்குட்பட்ட சீஸ்தானென்னு மூரில் ஜனிக்குங் குதிரைகளும் மேற்சொன்ன சகல நற்குணங்களையும் பொதிந்ததா யிருந்து இதை இரண்டாந்தரமென்று சொல்லப்படும்.

3-வது. அறபுதேசத்துக் குட்பட்ட அதனென்னுமூரிற் சனிக்குங் குதிரைகளும், குருசானென்கிற தேசத்தைச்சேர்ந்த குதிரைகளும் அதிக பராக்கிரமத்தையுந் தபிரியத்தையு முடையதா யிருக்கும்.

4-வது. காபுல்கந்தாரென்னுந் தேசத்துக் குதிரைகளானது அதிக சுருசுருப்புள்ளதாயும், வேகத்தை யுடையதாயு மிருக்கும் ஆயினும், முல்த்தானென்னுந் தேசத்துக் குதிரைகளானது உருவஞ் சிறியதாகத் தோன்றினும் அதிக பலத்தை யுடையதாயிருக்கும்.

5-வது. காபுலைச்சேர்ந்த காடுகளில் இலக்கி செங்கலென்றொரு காடுண்டு. அந்தக் காட்டில் சஞ்சரிக்குங் குதிரைகளானது மிகுந்த சிலாக்கியமும் புகழ்ச்சியு முடையதா யிருக்கும்

6-வது. இந்தஸ்தான் தேசத்தைச் சேர்ந்த மான்தேசு கான்தேசு என்னுமூரில் ஜனிக்குங் குதிரைகளும் அப்படியே யிருக்கும்.

7-வது. கெங்கா ஜம்னாவென்னும் நதியோரத்தில் கெங்காத்திரி யமுனாத்திரி என்னுமூரில் ஜனிக்குங் குதிரைகள் மிகுந்த சிலாக்கியப்பட்டதாக விருக்கும்.

8-வது. கச்சிதேசத்துக் குதிரைகளானது அழகிலும் பலத்திலும் ஓட்டத்திலும் அதிக பிரபலமானது. இதை அறபிராச்சியத்துக் குதிரைகளுக்குச் சமானமென்று சொல்லுவார்கள்.

9-வது. காட்டேவாரிற் சனிக்குங் குதிரைகளும் மேற்சொன்னபடியே யிருக்கும்.

10-வது. கோலாரென்னுமூரிற் சனிக்குங் குதிரைகளும், கேப்பு குதிரைகளும் உதவமாட்டாது.

11-வது மட்டங்களில் மைசோமட்ட முதற்றரமாயும், அச்சுமட்ட மிரண்டாந்தரமாயும், பழனி மட்டம் மூன்றாந்தரமாயுஞ் சொல்லுவார்கள்.

12-வது. தட்டுவாணிகளில் மாரட்டிய தேசப்புத் தட்டுவாணிகளை முதற்றரமென்று சொல்லப்படும்.

## குதிரை ஜனிக்கும் வேளைப் பயன்

குதிரை இரவில் முதற்சாமத்தில் சனித்தால் அதனால் எஜமானுக்கு சம்பத்துண்டாய் நாளுக்கு நாள் குதிரை லாயங்களில் குதிரைகள் நிறைந்து அதிக பாக்கியத்தைக்கொடுக்கும். இரண்டாஞ்சாமத்தில்சனித்தால் அதினால் எஜமானுக்கு நல்ல யோகத்தையுடைய குமாரன் பிறப்பான். மூன்றாஞ்சாமத்தில் சனித்தால் அதினால் எஜமானுக்கு நாளுக்கு நாள் அதிக பாக்கியமுண்டாய் செலவுக்கதிகமான வரும்படிகள்வந்து திரவியம்சேர்ந்து சவுக்கியமுண்டாகும். நான்காம்சாமத்தில் சனித்தால் [illegible]ல்

எஜமானுக்கு மகா சௌந்தரியமுடைய குமாரத்தி பிறந்து பாக்கியமுண்டாய் யோக்கியமான மருமகன் வந்து மணம்புரிவான். இப்பயன்கள் சித்திரை மாதமன்றி மற்ற பதினொருமாதத்துக்குமாகும்.

இதற்கு விரோதமாய் குதிரை பகல்முதற்சாமத்தில் சனித்தால் அதனால் எஜமான் நாளுக்குநாள் தரித்திரிவானும் வரவுக்கதிக செலவுநேரிறி வியாகூலத்தையடைவான். இரண்டாஞ்சாமத்தில் சனித்தால் அதனால் எஜமான் அதிக வியாதியையாவது மரணத்தையாவது மிகுந்த சலிப்பையும் தரித்திரத்தையுமாவது அடைவான். அல்லது தன் பிள்ளைகளுக்குத் தான் கருமஞ்செய்பத் தக்கவனாகவாவதாவான். மூன்றாம்சாமத்தில் சனித்தால் அதனால் எஜமான் அதிக கஸ்திபடைந்து தீராத வியாகூலமுள்ளவனும் தன் பிள்ளைக்குத் தான் கருமஞ்செய்யத் தக்கவனாவான். நான்காம்சாமத்தில் சனித்தால் அதனால் எஜமான் தாரமிறந்து அதிக வியாகூலத்தையடைவான். இப்பயன்களுக்கு மேற்சொன்ன சித்திரைமாதமொன்றுதவிர மற்ற பதினொருமாதத்துக்காகும். சித்திரைமாதத்தில் குதிரை சனித்தால் அதனால் எஜமானுக்கு வயதுகுன்றி பாக்கியங்குறைந்து தரித்திரமேலிட்டுப் பலபல வியாகூலத்தைக் கொடுக்கும் இந்த தோஷம் நீங்கும்பொருட்டாய் தானதருமஞ்செய்து குதிரைக்குட்டியின் காதையறுத்து மூளிசெய்யவேண்டும். அல்லது குட்டியைப் பரதேசிகளுக்குக் கொடுத்துவிடவேண்டும். இப்படி செய்யாமல் குட்டியை வீட்டில் வைத்திருந்தால் அதனால் அதிக கஷ்டத்தைக் கொடுக்கும்.

## குதிரையின் ஆயுள் பற்களாலறியும் வகை

குதிரைகளுக்கு வயது கண்டிப்பாய் மூப்ப தென்றுஞ் சிலதேசத்துக் குதிரைகள் மாத்திரம் ஐம்பது அல்லது அறபதுவரையிலிருக்குமென்றும் அப்படி யிருந்தாலுஞ் சவாரிமுதலிய வேலைகளுக் குதவமாட்டாதென்றுஞ் சொல்லி யிருக்கிறார்கள். குதிரையின் பற்களில் ஐந்துவருடமுதல் வருண பேத முண்டாகுமென்றும், அதில் ஒவ்வொரு வரு ணம் மூன்றுவருட மிருக்குமென்றும், இந்த வருண பேதங்களால் குதிரைகளின் வயதை இவ்வளவெ ன்று குறித்துக் கொள்ளலாமென்றுஞ் சாஸ்திரங் களில் சொல்லியிருக்கிறார்கள். அதாவது குதிரை பற்களினது சுபாவநிறமாறி வேற்றுநிறங்கள் ஆரம் பித்தவுடனே ஐந்து வயதென்றும், அதற்குமேல் தோன்றும் நிறமொன்றுக்கு மூன்றுவருடமென்கிற கணக்கின்படி குறித்துக்கொள்ளவேண்டும். இந்தப் படி குதிரைக்கு முப்பத்திரண்டுவயது வரையில் காலிகா-அறளிகா-குளிசா - காஜா - மாக்கா-சிங்கா- ஊலிகா-லங்குனி-பெஸ்தி என ஒன்பதுவித நிறங்க ளுண்டு.

அவையாவன:

1-வது. குதிரையினுடைய பற்களின் சுபாவ நிறமாறி கஸ்தூரி அல்லது புகைநிறங்கொள்ளில் அந்த நிறத்துக்குப்பெயர் காலிகாவென்று சொல் லப்படும். அப்போது குதிரையின் வயது எழு அல் லது எட்டென்று குறிக்கப்படும்.

2-வது. பொன் அல்லது மான்நிறங்கொள்ளில் அந்த நிறதத்துக்குப்பெயர் அருளிகாவென்று சொல்லப்படும். அப்போது குதிரையின் வயது பத்து அல்லது பதினொன்றென்று குறிக்கப்படும்.

3-வது. சிவந்த பவளகறை அல்லது சிவந்த காரசிசி நிறங்கொள்ளில் அந்த நிறத்துக்குப்பெயர் குளிகரவென்றுசொல்லப்படும். அப்போது குதிரையின் வயது பதின்மூன்று அல்லது பதினான்கென்று குறிக்கப்படும்,

4-வது. தாம்பூலத்துடன் சேர்த்து மென்ற கத்தக்காம்பு நிறங்கொள்ளில் அந்த நிறத்துக்குப் பெயர் காஜாவென்று சொல்லப்படும். அப்போது குதிரையின் வயது பதினாறு அல்லது பதினேழென்று குறிக்கப்படும்.

5-வது ஈநிறங்கொள்ளில் அந்த நிறத்துக்குப் பெயர் மாக்காவென்று சொல்லப்படும். அப்போது குதிரையின வயது பத்தொம்பது அல்லது இருபதென்று குறிக்கப்படும்

6-வது. முத்துச் சிப்பியின் நிறங்கொள்ளில் அந்த நிறத்துக்குப் பெயர் சிங்காவென்று சொல்லப்படும். அப்போது குதிரையின் வயது இருபத்திரண்டு அல்லது இருபத்திமூன்றென்று குறிக்கப்படும்.

7-வது. பற்களில் துவாரங்கள் விழுந்து பக்கத்து மாமிசம் எடுபட்டுப்போனால் அந்த அடையாளத்துக்குப்பெயர் ஷலிகாவென்று சொல்லப்படும்.

அப்போது குதிரையின் வயது இருபத்தைந்து அல்லது இருபத்தாறென்று குறிக்கப்படும்.

8-வது பற்கள் அசைவுண்டாகில் அந்தஅடையாளத்துக்குப் பெயர் லங்குனி யென்று சொல்லப்படும். அப்போது குதிரையின் வயது இருபத்தெட்டு அல்லது இருபத்தொன்பதென்று குறிக்கப்படும்.

9-வது பற்கள் விழ ஆரம்பித்தால் அந்த அடையாளத்துக்குப்பெயர் பெஸ்தியென்று சொல்லப்படும். அப்போது குதிரையின் வயது முப்பத்தொன்று அல்லது முப்பத்திரண்டென்று குறிக்கப்படும்.

10-வது. பற்கள் விழாமல் மேற்சொன்னகிறங்கள் முழுது மாறிப் பஞ்சுபோல் வெளுத்து கடைவாய்ப்பற்கள் கண்டிருக்குமானல் அப்போது குதிரையின் வயது நாற்பதென்று குறிக்கப்படும்.

இவைகளின் விபரம் இதனடியிற்கண்டிருக்கும் டாப்பினு லறிந்துக்கொள்ளலாம்.

## குதிரை விலைக்கு வாங்கும்போது பார்க்கவேண்டிய சகுனங்கள்

1-வது. குதிரை விலைக்கு வாங்கப் பார்வையிடும்போது குதிரை தற்செயலாவது அல்லது வாங்குகிறவர்களைக் கண்டாவது அனுமானித்தாலுங் கூத்தாடினாலும் உடையவன் சொன்ன விலைகொடுத்து வாங்கினுல் அதிக சம்பத்தைக் கொடுக்கும்.

2-வது. குதிரை வாங்குகிறவர்களைப் பார்த்து வலது முன்னங்காலை நீட்டி நமஸ்குமாகில் மேற்சொன்னபடியே வாங்கினால் அதிக பிரயோசனமும் நாளுக்குநாள் குதிரைகளால் நிறைந்த லாபமும் அதிக சம்பத்தும் உண்டாகும்.

3-வது. குதிரை வாங்குகிறவன் முன்பாக இலத்திப்போடுமாகில் அதிக சம்பத்தும் திரவியமும் சுபகாமாகிய கலியாணமும் புத்திரபாக்கியமும் தீர்க்காயுசும் உண்டாகும்.

4-வது. குதிரை வாங்குகிறவனைக்கண்டு உடம்பைச் சுளுக்கினாலும் தலையை யசைத்தாலும் தின்னும் புல்லை கக்கினாலும் தும்பினாலும ஏப்பம் விட்டாலும் தரையிற் படுத்துப் புரண்டாலும் சிறுநீர் விட்டாலும் இவை முதலிய குறிகள் காண்கில்ஆகாதென்றெண்ணிக் குதிரையை வாங்கக்கூடாது.வாங்கினால் அதிக துன்பத்தையுந் தரித்திரத்தையும் வியாகூலத்தையும் உண்டாக்கும்.

## சாதி யறியும்வகை

குதிரைகளின் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர என நான்கு வகைப்படும், அவைகளைச் சலத்தில் நீர்தவிட்டு சோதிக்கவேண்டும்.

### பிரம்மசாதி

தண்ணீரைக் கண்டவுடனே அதிக சந்தோஷத்தை யடைந்து கண்வரையில் மூழ்கி தண்ணீர் குடிக்கும். அல்லாமலும் தண்ணீரிலிறங்க எவ்வளவேனும் அஞ்சமாட்டாது. இதின் குணமானது இந்

திரியக்கட்டுள்ளதாயும், நல்ல நடத்தையுள்ளதாயும், குற்றமற்ற நடையை யுடையதாயும், புத்தியுள்ளதாயும், சகலகுதிரைகளிடத்திலும் நல்லமனதையுடையதாயு மிருக்கும் அந்த குதிரையானது மங்கல காரியங்களுக்கும் இராஜாக்களைப் போய் தரிசிப்பதற்கும் சுவாதீனப்படும். ஆயினுஞ் சத்துருக்களோடெதிர்த்துப் போர்செய்வதற்குப் பின்வாங்கும். எஜமான் எதிரிகளோடு போர்செய்து வெற்றியடைய எவ்வளவு விரும்பினாலும் ஓரடியாவது முன்வையாமல் தன்னெஜமானை எதிரிகளிடத்தில் அகப்படவொட்டாமற் பாதுகாத்து விரைவில் வீட்டிற் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

## க்ஷத்திரியசாதி

தண்ணீரி லிரண்டுதட்டையும் மூக்கு வரையில் விட்டுத் தண்ணீர் குடிக்கும். இதன் குணமானது பராக்கிரமமும் கோபமும் தேகபலமுள்ளதாயும், சத்துருக்களின் பூமியை ஜெயிக்கத்தக்கதாயும், பெருந்தொனி யுள்ளதாயும், பெரிய தேகத்தையுடையதாயு மிருக்கும். இந்தக் குதிரைகளானது சத்துருக்களுடன் போர்செய்வதற்கும், அவர்களை தோல்வுபடுத்தி எஜமானை வெற்றி யடைவிப்பதற்குதவும் இது கள் எஜமான் மனதின்படிச் சத்துருக்களின் படைமேலேறி எஜமானைச் சத்ருக்களிடத்தில் அகப்படவொட்டாமல் போர்செய்து எஜமான்கையில் சத்துருக்கள் அகப்படும்படிக்குத் தனது கால்களினாலடித்தும், பற்களாற் கடித்தும், சத்ருக்களின் தேகத்தை துண்டுதுண்டாகச்செய்து எஜமான் எவ்வகையிலும் வெற்றி யடையும்படியாய்ச் செய்விக்

கும். ஆகையா லிந்த சாதிக் குதிரைகளை உயுத்தங்க ளுக்கு உதவும்படித் தனியாய்க் கட்டிவைத்து பாது காத்து வரவேண்டும்.

வைசியசாதி

ஜலத்தைக்கண்டால் அஞ்சியஞ்சி நடக்கத்தக் கதுமாய் தண்ணீரில் உதடுமட்டும் படாததுமாய் மேலிட்டாப்போல மிகவும் மெதுவாய்த் தண்ணீர் குடிக்கும் இதின் குணமானது வெய்யில் கானல் காற்று மழைமுதலியவைகளைச் சகிக்கத்தக்கதாயும் ஒப்பில்லாததாயும், சுமைகளைச் சுமப்பதற்கும் வண்டிக விழுப்பதற்கும் இன்னமு மிதைப்போலொத்த முறட்டுவேலைக் குதவுமேயல்லாது சவாரிக்குதவவும், எஜமானுக்குக்கீழ்படிந்து நடக்கவுமாட்டாது.

சூத்திரசாதி

சவுக்கடிப்படாதொழிபத் தண்ணீரிற் கால் வைக்கமாட்டாது இதன்குணமானது சகல வயோக்கியத்தையும் அசுத்தத்தையும் உடையதாகவிருக்கும், இது சவாரிக்கு உதவமாட்டாது சிலவேளைகளில் எஜமானைக் கீழேதள்ளி உதைத்து வாயினாற் கடித்து மனதில் பகைவைத்துக்கொண்டு கொன்று போடும் ஆகையால் இந்தசாதிக்குதிரைகளை ஒருபோதும் வாங்கலாகாது வாங்கினால் அதிக கஷ்டத்தைக் கொடுக்கும்.

## குதிரையின் ராசி யறியும்வகை

குதிரை நடுத்தரமாயும், அதிகமாய்ப் பருத்து மிராமலும், அதிகமா யிளைத்திராமலும், கால்களதிக உரத்தையுடையதாயும், கோபத்திலும் பசியிலும்

அதிகப்பட்டதாயும், தன்னருகிலிருக்குங் குதிரைக ளோடு சண்டைசெய்யுங் குணத்தை யுடையதாயும், அதிக வேகமும் துஷ்டகுணமும் வாய்க்கடிசும் கெட்ட நடத்தையுமுடைய குதிரையை காத்தி இராசி எனப்படும்.

குதிரை மிகமெலிந்தும் இளைத்தும் அதிக நாசுக்காயும், சந்தோஷமாயும், எஜமான் சொற்படி நடப்பதாயும் இடக்குகள் செய்யாததாயும், அதிக நித்திரை யில்லாததாயும், நெய் சர்க்கரை முதலிய இனியபதார்த்தங்களை யுகந்ததாயு மிராநின்ற குதிரைகளை பத்தவிராசி எனப்படும்.

குதிரை யதிக புஷ்டியாயும், சோம்பேறித்தனமாயும், தன்னருகிலிருக்குங் குதிரைகளோடு அதிக பிரியத்தை யுடையதாயும், சுறுசுறுப்பில்லாததாயும் படுக்கையில் கால்களை நீட்டிக்கொள்ளுகிறதாயுமிரா நின்ற குதிரைகளை கிரிராசி எனப்படும்.

## சுழியி லிலக்கணம்

குதிரையின் தேகத்திலுள்ள உரோமங்களில் பலவிதமான சுழிகளுண்டு. அவைகளின் வடிவும் அளவும் இடமும் பயனுமிப்போ தெடுத்துக்காட்டுவோம்

## நன்மையைத்தருஞ் சுழிகள்

1. குதிரைக் கழுத்தின்கீழ் பேஷ்பந்துக்கு மேல் நாலு அல்லது மூன்று அல்லது இரண்டு அல்லது ஓரங்குல நீளத்தில் சுழியிருந்தால் தெய்வமணி என்றுபெயர். இந்தச் சுழிக்குமுன் மற்ற எந்தச் சுழிகளின் பொல்லாப்பும் ஒன்றுஞ் செய்யமாட்

டாது. இதனால் எஜமானுக்கு நாளுக்குநாள் அதிக சம்பத்தும் தீர்க்காயுசும் புத்திரபாக்கியமும் தேக சவுக்கியமும் கீர்த்தியுமுண்டாகும்.

2. குளம்புக்குமேல் இரண்டு அல்லதுஓரங்குல நீளத்தில் மயிர்வளர்ந்திருந்தால் சிந்தாமணி என்றும்பெயர். இதனையிந்தக் குதிரையின் எஜமானுக்கு அதிக பாக்கியத்தையும் சவுக்கியத்தையுங் கொடுக்கும். அந்தக் குதிரை யிருக்கிறவரையில் வேறு குதிரைவாங்குவது நன்மையல்ல. இன்னமுமிதைபதிக விலைகொடுத்து வாங்கவேண்டியது

3. குதிரை முதுகின் வலது பக்கத்திற் சுழியிருந்தால் மேகலை என்று பெயர். இதனை யிந்தக் குதிரையின் எஜமானுக்குக் கீர்த்தியையும் ஐசுவரியத்தையுங் கொடுக்கும்.

4. தொண்டையின்கீழ் இடபத்தின்கழுத்தைப் போலே மயிர் குஞ்சாய் வளர்ந்திருக்குமாகில் கண்டாபரன் என்று பெயர். இதனையிந்தக் குதிரையின் எஜமான் எப்போதும் வெள்ளி பொன் நவரத்தினங்களில் மூழ்கிய பதிகசம்பத்தை யுடையவனாக விருப்பான்

5. குதிரையின் தலை நெற்றி மார்பு பிடரி பிசுத்தினருகு இவ்வைந்திடங்களிலுஞ் சுழியிருந்தால் ஜெயமங்களம என்று பெயர். இது சகல குதிரைகளிலும் மிகுந்த ஜெயத்தையுடையதாயும், தன் எசமானுக்குக் கீர்த்தியையும் வெற்றியையும் ஆதாயத்தையும் கொடுக்கும். இக்குறிப்புள்ள குதிரையின் பேரில் ஏறும்போது அதின் காலுக்கு முத்தமிட்டு

கண்ணைத்துடை உதவும்படித் தனியாய்க் கட்டி வைத்து பாதுகாத்து வரவேண்டும்.

வைசியசாதி

ஜலத்தைக்கண்டால் அஞ்சியஞ்சி நடக்கத்தக்கதுமாய் தண்ணீரில் உதடுமட்டும் படாததுமாய் மேலிட்டாப்போல மிகவு மெதுவாய்த் தண்ணீர் குடிக்கும். இதின் குணமானது வெய்யில் கானல் காற்று மழை முதலியவைகளைச் சகிக்கத்தக்கதாயும் ஓய்வில்லாததாயும், சுமைகளைச்சுமப்பதற்கும், வண்டிகளிழுப்பதற்கும், இன்னமு மிதைப்போலொத்த முரட்டுவேலைக் குதவுமேயல்லாது சவாரிக் குதவவும் எஜமானுக்குக் கீழ்படிந்து நடக்கவுமாட்டாது.

சூத்திரசாதி

சவுக்கடிப் படாதொழியத் தண்ணீரிற் கால் வைக்கமாட்டாது. இதின் குணமானது சகல வயோக்கியத்தையும், அசுத்தத்தையும் உடையதாக விருக்கும், இது சவாரிக்குதவமாட்டாது சில வேளைகளில் எஜமானைக் கீழேதள்ளி உதைத்து, வாயினாற் கடித்து மனதில் பகைவைத்துக்கொண்டு கொன்றுபோடும். ஆகையா லிந்தமாதிரிக் குதிரைகளை ஒருபோதும் வாங்கலாகாது. வாங்கினால் அதிக நஷ்டத்தைக் கொடுக்கும்.

## குதிரையின ராசியறியும்வகை

குதிரை நடுத்தரமாயும், அதிசமாய்ப் பருத்திராமலும், அதிகமாயிளைத்திராமலும், கால்களதிக உரத்தையுடையதாயும், கோபத்திலும் பசியிலு பதிகப்பட்டதாயும், தன்னருகிலிருக்கும் குதிரைக

ளோடு சண்டைசெய்யுங் குணத்தை யுடையதாயும், அதிக வேகமும் துஷ்டகுணமும் வாய்க்கடிசும் கெட்ட நடத்தையுமுடைய குதிரையை காத்தி இராசி எனப்படும்.

குதிரை மிகமெலிந்தும், இளைத்தும், அதிக நாசக்காயும், சந்தோஷமாயும், எஜமான் சொற்படி நடப்பதாயும், இடக்குகள் செய்யாததாயும், அதிக நித்திரையில்லாததாயும், நெய் - சருக்கரை முதலிய விலிய பதார்த்தங்களை யுகந்ததாயு மிராகின்ற குதிரைகளை பத்தவிராசி எனப்படும்.

குதிரை யதிக புஷ்டியாயும், சோம்பேரித்தனமாயும், தன்னருகிலிருக்குங் குதிரைகளோடு அதிக பிரியத்தை யுடையதாயும், சுறுசுறுப்பில்லாததாயும் படுக்கையில் கால்களை நீட்டிக் கொள்ளுகிறதாயு மிராளின்ற குதிரைகளை கிரிராசி எனப்படும்.

## சுழியிலக்கணம்

குதிரையின் தேகத்திலுள்ள உரோமங்களில் பலவிதமான சுழிகளுண்டு. அவைகளின் வடிவும் அளவும் இடமும் பயனு மிப்போ தெடுத்துக் காட்டுவோம்.

## நன்மையைத்தருஞ் சுழிகள்

குதிரைக் கழுத்தின்கீழ் பேஷ்பந்துக்கு மேல் நாலு அல்லது மூன்று அல்லது இரண்டு அல்லது ஓரங்குல நீளத்தில் சுழியிருந்தால்,தெய்வமணி என்று பெயர். இந்தச் சுழிக்குமுன் யற்ற எந்தச் சுழிகளின் பொல்லாப்பும் ஒன்றுஞ் செய்யமாட்டாது. இதனால் எஜமானுக்கு நாளுக்குநாள் அதிக

சம்பத்தும் தீர்க்காயுசும், புத்திரபாக்கியமும், தேக சவுக்கியமும், கீர்த்தியுமுண்டாகும்.

2. குளம்புக்குமேல் இரண்டு அல்லது ஓரங்குல நீளத்தில் மயிர் வளர்ந்திருந்தால் சிந்தாமணி என்று பெயர். இதனால் இந்தக் குதிரையின் எஜமானுக்கு அதிகபாக்கியத்தையும், சௌக்கியத்தையுங்கொடுக்கும் அந்தக் குதிரை இருக்கிற வரையில் வேறு குதிரை வாங்குவது நன்மையல்ல, இன்னமு மிதை அதிகவிலை கொடுத்து வாங்கவேண்டியது.

3. குதிரை முதுகின் வலதுபக்கத்திற் சுழி யிருந்தால் மேகலை என்று பெயர். இதனை லிந்தக் குதிரையின் எஜமானுக்குக் கீர்த்தியையும், ஐசுவரி யத்தையுங் கொடுக்கும்.

4. தொண்டையின்கீழ் இடபத்தின் கழுத் தைப்போலே மயிர் குணுக்காய் வளர்ந்திருக்கு மாகில், கண்டாபரன் என்று பெயர். இதனை லிந்தக் குதிரையின் எஜமான் எப்போதும் வெள்ளி-பொன் நவரத்தினங்களில் மூழ்கி யதிக சம்பத்தையுடைய வனாக விருப்பான்.

5. குதிரையின் தலை நெற்றி மார்பு பிடரி பீசத் தினருகு இவ் வைந்திடங்களிலுஞ் சுழியிருந்தால், ஜெயமங்களம் என்று பெயர். இது சகல குதிரை களிலும் மிகுந்த ஜெயத்தை யுடையதாயும், தன் னெசமானுக்குக் கீர்த்தியையும் வெற்றியையும், ஆதாயத்தையும் கொடுக்கும். இக்குறிப்புள்ள குதி ரையின்மேரி லேறும்போது அதின்காதுக்கு முத்த மிட்டு கண்ணைத்துடைத்து தட்டிக்கொடுத்துச்

சவாரிசெய்யவேண்டும். இன்னமும் இந்தக் குறிப் புள்ளகுதிரைகள் எவ்வளவுவிலையிருந்தாலும் வாங்க வேண்டும். இன்னமிந்தகுறியுள்ள குதிரை கைவசப் படுவதும் ஒருபாக்கியமென் றெண்ணவேண்டும்.

6 குதிரையின் தேகநிறமொன்றாயிருந்து தலை மார்பு ஒருகால் பீசம் வால் இவ்வைந்திடங்களிலும் வெளுத்த நிறமுண்டாயிருந்தால் சஷ்டமங்கலம் என்று பெயர். தெய்வாசகாயத்தினாலிந்தக் குறியுள்ள குதிரை வசப்படுமாகில் இந்த நன்றிக்காக கடவு ளுக்கு வந்தனஞ்செய்து சவாரிசெய்யவேண்டும். இன்னமுமிந்தக் குதிரையை மகாபத்திரமாய் குளி சங்களைப்போலே பாதுகாத்து தன்னையல்லாமல் மற்றொருவரையுஞ் சவாரிசெய்யவொட்டாமல் எச் சரிக்கையாயிருக்கவேண்டும். இதன் நன்மையினால் நாளுக்கு நாளதிக சம்பத்துண்டாய் குதிரை லாய மானது எப்போதுங் குதிரைகளால் நிறைந்து பரி பூரணமாக விருக்கும்

7. குதிரையின் முதுகிலிரண்டு புரத்திலு மிர ண்டு சுழியிருந்து நெற்றியில் தாமரை மொட்டைப் போலொருசுழியிருந்தால் சுமங்கலம் என்றுபெயர். இது அதிக நன்மையுடைய குதிரையாம். இத் தன்மையால் எஜமானுக்கு அஷ்ட ஐசுவரியமும் அளவிறந்த சௌக்கியமும் நாளுக்குநாளதிகப்பட் டுவரும்.

மேற்சொல்லிய இந்த எழுவகைக் குறிகளுக் குஞ் சகல குறிகளுக்குந் தலைமையானகுறிகளாகும். ஆகையால் இக்குறிகளுள்ள குதிரைகள் சகல குதி

ரைகளுக்குந் தலைமையானதாயும் கிடைப்பரிதாயு மிருந்தால் சிலவேளை தெய்வீகத்தினாலும் புண்ணிய வசத்தினாலும் கண்ணிலகப்பட்டால் குதிரை வைத் திருப்பவர்களுக்கு வெகுமதி முதலான துஞ்சந்தோ ஷமடையச்செய்து கேட்டவிலை கொடுத்து வாங்கி உயிர்போல்வைத்துப் பாதுகாத்துவந்தால் அதிக நன்மையுண்டாகும்.

## இரண்டாந்தரக்குறிப்பு

குதிரை தீர்க்காயுசுடையதுமாய் எஜமானுக்கு அதிக பிரயோசனத்தைக் கொடுப்பதாயு மிருப்ப தற்கு பத்திடங்களிற் சுழிகளிருக்கவேண்டும். இந் தப் பத்துசுழிகளுக்கும் தசாதரு என்று பெயர். அவையாவன குதிரையின் மஸ்தகத்திலிரண்டும்மார் பினிருபுறத்திலு மிரண்டும் கூக்காவிலிரண்டும் வயிற் றின் கீழிரண்டும் மேலுதட்டின் மேலொன்றும் நெத்தியிலொன்று மிருக்கவேண்டும்.

குதிரையினாலே எஜமானுக்கு அதிக பாக்கிய முண்டாவதற்கு எட்டுசுழிகளுமுண்டு அவையாவன மார்பிலிரண்டும் நெத்தியி லிரண்டும் மேலுதட்டி லிரண்டும் விலாப்புறமிரண்டிலு மிரண்டும் இருக்க வேண்டும்.

## சுபாவிர்தபலன்

1. சுழிகள் பிரகாசமாயிருப்பதும் சுத்தி ரூபமா யிருப்பதும் எஜமானுக்கு ஜெயத்தைக் கொடுக்கும்.

2. தலையிற் பிரதட்சணமாயிரண்டு சுழிகளிருந் தால் மங்கலம் என்று பெயர். அது எஜமானுக்கதிக பாக்கியத்தைக் கொடுக்கும்.

3 நெத்தியிற் பிரதட்சணமா யிரண்டு சுழிக ளிருந்தால் கசஹுனு என்று பெயர். அது எஜமா னுக்கு அதிக லாபத்தைக் கொடுக்கும்.

4. நெற்றியி லிரண்டு நீண்ட சுழிகளிருந்தால் க்ஷத்திரி என்று பெயர். அது எஜமானுக்கு அதிக பாக்கியத்தைக் கொடுக்கும்.

5. நெற்றியிற் பிரதட்சணமாய் மூன்று சுழிக ளிருந்தால் திரேதாக்கினி என்றுபெயர். அது எஜ மானுக்கு ஜெயத்தைக்கொடுக்கும்.

6. நெற்றியில் மூன்று சுழிகள் நீண்டிருந்தால் க்ஷத்திர பத்தி என்று பெயர். அது எஜமானுக்கு அதிக கீர்த்தியைக் கொடுக்கும்.

7. நெற்றியிலொன்றின்மேலொன்றாய்மூன்றுசுழி கள் வரிசையாய்மேலேறியிருந்தால்கிசிரேணிஎன்று பெயர். அது எஜமானுக்கு ஜெயத்தைக்கொடுக்கும்.

8 நெற்றியிற் பிரதட்சணமாய் நான்கு சுழிகள் சதுரமாயிருந்தால் சதுராங்கம் என்றுபெயர். அது எஜமானுக்கு ஜெயத்தைக்கொடுக்கும்.

9. கடைக்கண்களிலிருக்குஞ் சுழிகள் குளாகார மாயிருந்தால் அதுஎஜமானுக்கு ஜெயத்தைத்தரும்.

10. காதுகளி லிருக்குஞ் சுழிகளுக்கு இடபங் கள் என்றுபெயர். அது எஜமானுக்கு ஜெயத்தை யும் திரவியத்தையுங் கொடுக்கும்.

11. கன்னத்தி லிரண்டுபுரத்திலுமிரண்டுசுழிக ளிருந்தால் ஷஹுனு என்றுபெயர். அது எஜமானு க்கு அதிக சுபத்தைக்கொடுக்கும்.

12. கழுத்தில் தேவமணிக்குங் கீழே பேஷபத்துக்கு மேலே ஒருசுழி யிருக்குமாகில் ரோசமா என்றுபெயர். அது எஜமானுக்கு அதிக பாக்கியத்தைக் கொடுக்கும்.

13. கழுத்தி லிரண்டு புறத்திலு மிரண்டு சுழிக ளிருந்தால் கண்டாபரன் என்று பெயர். அது எஜமானுக்கு அதிக பொருளைக்கொடுக்கும்.

14. பார்பி லிரண்டுசுழி சோடா யிருந்தால் அனுஹ என்றுபெயர். அது எஜமானுக்கு அதிகபிரயோசனத்தைக் கொடுக்கும்.

15. மார்பில் சுகத்தியாகாரமான மூன்று சுழிகள் ஊர்த்துவ முகமாக விருந்தால் அந்தக் குதிரையினால் எஜமான் சத்துருக்களைச் ஜெயிப்பான்.

16. மார்பில் சவுக்கபாய் நான்கு சுழிகளிருந்தால் சத்துருக்கன் என்றுபெயர். அது சத்துருக்களையுங் கொல்லும் சம்பத்தையுங் கொடுக்கும்,

17. விலாவி லிரண்டு புறத்திலு மிரண்டு சுழிக ளிருந்தால் கோலத்தலன் என்று பெயர். அது எஜமானுக்கு அதிக ஆபரணங்களைக் கொடுக்கும்.

18. கண்டத்தினடியி லிரண்டு சுழிகள் விருத்தமாயிருந்தால் சக்காக்கி என்று பெயர். அது எஜமான் சத்துருக்களை நாசஞ்செய்யும்.

19. முன்னங்கால்களிற் சுழிகளிருந்தால் அது எஜமானுக்கு தேகாபரணங்களைக் கொடுக்கும்.

20. வயருந்திக்கு நேராக மேலே சுழிகளிருந்தால் மேகலை என்றுபெயர். அது எஜமானுக்கு தன தானியங்களை யதிகப்படுத்தும்.

21. வாயில் இரண்டு புறத்திலு மிரண்டு சுழிக ளிருந்தால் காசரம்போத்தா என்று பெயர். அது எஜமானுக்கு அதிக லாபத்தைக் கொடுக்கும்.

இதுவரையிற் பேசிவந்த சுபாவிர்தபலனாது மேற்கண்ட தலங்களிற் சுழிகள் மேற்சொன்னபடி பிரதட்சணமாய் சோடுசோடாயிருக்குமாகில் மேற் குறித்தபடியே பலனுண்டாகும். இதற்கு விரோத மாயிருக்குமாகில் அதன் பலனு மப்படியே விரோ தப்படும். அவைகளைப் பின்னாற்பேசும் அசுபாவிர் த்த பலனில் விவரித்துப் பேசுவோம்.

குதிரையினுடைய மார்பி னுரோமங்கள்நீண்டு மார்பை மறைத்தாலும் கால்களி னுரோமங்கள் நீண்டு கண்களை மறைத்தாலும் பிடரியி னுரோமங் கள் நீண்டு பூமியில் விழுந்தாலும் இந்நான்கு குறி யுள்ள குதிரைகளை யெல்லாம் புண்ணியக்குதிரை யென்று சொல்லப்படும்.

## அசுபாவிர்த பலன்

1. குதிரை நடுமார்பில் ஒரு சுழியிருக்குமாகில் அறத்தாவல என்று பெயர். அது எஜமானுடைய பாக்கியத்தை நாளுக்குநாள் போக்கியும் புத்தியை மழுங்கச் செய்தும் நிர்பாக்கியத்தைக் கொடுத்து வரும்.

2. விலாவி லொரு சுழியிருந்தால் அங்கவா என்றும், சித்திரியா என்றும் பெயர். அது எஜமா னுடைய சிறிய சகோதரனைக் கொல்லும்.

3. அண்டத்தின்மேலொரு சுழியிருந்தால் சஹ வர்த் என்று பெயர். அது எஜமானை மலடனாக்கும்.

4. தொப்புளின்கிழொரு சுழியிருந்தால் நாபாவர்த் என்றுபெயர். அது எஜமானுக்கு நிடிரென்று வபரு வலியுண்டாகும்.

5. கீழ் வயிற்றில் ஒரு சுழியிருந்தால் போத்தாவர்த் என்றுபெயர். அது எஜமானைப் பசித்திருக்கும்படி செய்து புத்தியையும் போகத்தையும் போக்கிவைக்கும்.

6. வலதுகால் அல்லது இடதுகாலில் ஒருசுழியிருந்தால் சாங்காவர்த் என்றுபெயர். அது எஜமானைத் தாரமிழக்கச்செய்யும், அல்லது வியாதியஸ்தனாக்கும்.

7. புருவத்தில் இரண்டு புறத்திலும் ஒரு சுழியிருந்தால் வக்காவர்த் என்று பெயர். அது எஜமானை எந்நேரமுங் கஸ்தியடையச் செய்யுமே யல்லாது ஒருபோதுஞ் சந்தோஷமடையச் செய்ய மாட்டாது.

8 மூக்கில் வலது பக்கத்தில் ஒரு சுழியிருந்தால் சதமாவர்த் என்று பெயர். இடது பக்கத்திலொருசுழியிருந்தால் சாவர்த் என்றுபெயர். இவையிரண்டும் எஜமானுக்கு அதிக நஷ்டத்தைக் கொடுக்கும்.

9. கண்ணுக்குமேலொரு சுழியிருந்தால் நத்தாராவர்த் என்று பெயர் அது எஜமானை என்னேரமும் அழச்செய்யும்.

10. கண்ணின்கீழொரு சுழியிருந்தால் இதுவும் எஜமானுக்கு மேற்சொன்ன பலனையே கொடுக்கும்.

11. காதிலொரு சுழியிருந்தால் கர்ணமூல் என்றுபெயர். அது எசமானுக்கு காதுநோயுண்டாகும்.

12. முன்னங்கால் அல்லது பின்னங் கால்களிலொரு சுழியிருந்தால் அது எசமானுடைய வேலைகளை யெல்லாந் தடங்கல் செய்யும்

13. வயிற்றின் கீழிருக்குஞ் சுழிகளானது ஒன்றோடொன்று கூடி இரண்டு சாண்வரையில் நீண்டிருக்குமாகில் பூரான் என்றுபெயர். அது எஜமானுக்கு அதிக கஷ்டத்தைக் கொடுக்கும். அல்லாமலும் எசமானை யவன் பெண்சாதியோடு அயிலாசம் புகச் செய்யும்.

14. கழுத்திற் பூரானிருக்குமாகில் அது எசமான்வீட்டில் எந்நேரமுஞ் சண்டைச் சச்சரவுகளுண்டாகி எசமானுக்குத் தீரா நோய்களை வந்து சம்பவிக்கும்.

15. வலதுகால் அல்லது இடதுகாலிற் பூரானிருக்குமாகில் அது எசமானுடைய சகோதரனைக் கொல்லும்

## எச்சரிக்கையுடன்
## கவனிக்கவேண்டிய சுழிகள்.

பூரானென்கிற சுழியானது குதிரையின் தேகத்தில் எந்த விடத்திலாவது யிருந்தால் அது எஜமானுக்கு கஷ்டத்தைக் கொடுக்குமே யல்லாது நயத்தை யொருபோதுங் கொடுக்க மாட்டாது குதிரை பரிட்சை யில்லாத சிலர் குதிரையின் பின்புறங்களிலும் பிரதட்சணமாய் தோன்றுத விடங்களிலு மிரா

நின்ற பூரான்சுழிகளானது யாதொரு பொல்லாங்கையுங் கொடாதென்று சொல்லுவார்கள். அது முற்றும் அபதமாயிருக்கும். ஆகையால் அவர்களுடைய சொல்லின்பேரில் மயங்காமல் பூரான்சுழியுள்ள குதிரைகளை வாங்காம லிருப்பீர்களாக. இதற்கு விரோதித்தால் அதிக இடுக்கங்களுக் குள்ளாவீர்கள்.

## பிரதானமா யறியவேண்டிய சுழிகளின் பெயர்.

1. குதிரையின் வயிற்றின்கீழ் அல்லது தேகத்தில் எந்த விடத்திலாவது ஒருஜாண் நீளத்திற் சுழியிருந்தால் அதற்குப் பானியா என்றுபெயர்.

2. வயிற்றின்கீழ் ஐந்து அல்லது ஆறங்குல நீளத்திற் சுழியிருந்தால் அதற்கு தஃனியா என்று பெயர்.

3. வயிற்றிலிருக்குஞ் சுழிகள் மற்ற சுழிகளோடுசேர்ந்து வயற்றின்கீ ழாறங்குல நீளத்திற் சுழியிருந்தால் அதற்கு சிப்லா என்று பெயர்.

4. முதுகில் சேணம் வைக்கு மிடத்தை விட்டு மற்றெந்த விடத்திலாவது தனித்தொரு சுழியிருந்தால் அதற்கு ஆசான்கஃவு என்று பெயர்.

5. சேணத்தின்கீ ழொரு சுழியிருந்தால் அதற்கு தலாத்தூத்து உன்று பெயர்.

6. பிடரியி லெந்தப் புறத்திலாவது தனித்தொரு சுழியிருந்தா லதற்கு கஃஅன்-கஃவு என்று பெயர்.

7. நெற்றியில் சுழிகளில்லாம லிருப்ப தற்கு படைத்ததேசன் என்றபெயர்!

## இவ்வேழு குறிகளும் உதவாதென்றறிக.

சகல குதிரைகளுக்கும் நெற்றியிற்சுழிகளிருக்கும், அப்படி யில்லாதிருப்பது அதிக அபுரூபம். அப்படி யில்லாவிட்டால் அந்த குதிரை ஐந்து வருடத்திற்குமேற் பிழைத்திராது. சிலவேளை ஐந்து வருடத்திற்குமேல் ஆறுமாதம் அல்லது ஒருவருடம் பிழைத்திருந்தால் தனக்குப் பதிலாய் தன் எசமான் சகோதரனைக் கொல்லும்.

இன்ன மிப்படியே குதிரையின் கீழுதட்டிலும், மூக்கின் துளைமேலும், கண்ணீர் விழுமிடத்திலும், பிடரியிலும், கொண்டையிலும், புயத்திலும், தொடையிலும், முழங்கால்களிலும், கணைக்கால்களிலும், வாயிலும், மயிருக்குள்ளிலும், சிஸ்னத்திலும், அதைச்சேர்ந்த விடங்களிலு மிராநின்ற சுழிகளுங் கெடுதியென் றறியவும்.

இன்னமுமிப்படியே நெற்றியின் குறுக்கே யிரண்டு சுழியிருக்குமாகில் கத்தரி என்று பெயர். முக்கோணமாய் மூன்று சுழியிருந்தால் சூலா என்று பெயர் இவை யிரண்டுங் கெடுதி என்றறிக.

இன்னமும் நெற்றியிலொரு வெள்ளைப்புள்ளி யிருந்து அந்தப்புள்ளி பெருவிரலுக்குள் மறைந்து போகுமாகில் ஆகுறபு என்று பெயர்.

இன்னமும் நெற்றியி லிருக்குஞ் சுழியானது கண்ணின் கீழ்புரத்தில் வந்திருந்தால் ஆன்குடா

என்றுபெயர். இவை இரண்டும் உதவாதென்றறிக.

இன்னமும் இரண்டு கண்களிலும் ஒருமணிப் பிரமாணம் வெளுத்திருக்குமாகில் அது அதிகஜெயத்தைக்கொடுக்கும். ஒற்றைக்கண்ணின் மாத்திரமிருந்தால் எக்குமண்டலியா என்று பெயர். அது உதவாதென்றறிக

குதிரையின் தேகத்திற் சில வடுக்களுண்டு. அவைகளுக்கு அஞ்சனம் என்றுபெயர். இப்போது அவைகளின் இடமும் வடிவும் பயனும் இனிமேல் எடுத்துக் காட்டுவோம்.

1. தேகமெல்லா மொருநிறமாயிருந்து விலாவில்மாத்திரம் ஒரு வடுவு நீலநிறமாயிருந்தால் கிஷ்ணவஞ்சனம் என்று பெயர் அது எஜமானைக் கொஞ்சநாளில் தரித்திரவானுக்கி பிச்சையெடுத்து இரந்துண்ணச் செய்யும்

2. தேகநிறத்துக்கு விரோதமாய் மார்பில் கஸ்தூரி நிறத்திலாவது புகைநிறத்திலாவது ஒருவடிவிருந்தால் அது காலவஞ்சனம் என்றுபெயர். அது எஜமானை அதிக விரைவிற் கொல்லும்.

3. தேகமெல்லா மொருநிறமாயிருந்து முன்னங்காலில் மாத்திரம் ஒருவடிவு காகிதநிறமாய் வெளுத்திருந்தால் செபஞ்சனம் என்றுபெயர். அது எசமான் குமாரத்தியைக் கொல்லும்.

4. தேகமெல்லா மொருநிறமாயிருந்து வாயில் மாத்திரம் சிவந்தமஞ்சள் அல்லது குங்குமப்பூ அல்

லது மான்மிறத்தி லொரு வடுவிருந்தால் அது எஜ மான் குமாரனைக் கொல்லும்.

இந்த நான்குவித வடுக்களும் மேற்சொல்லிய நிறத்திலிருந்தாலும் அல்லது வேறு நிறங்களி லிருந்தாலும் தகாது என்றறிக.

ஆகையா லிப்பேர்ப்பட்ட குதிரைகள் இனு மாய் கொடுக்கிறதா யிருந்தாலும் வாங்கலாகாது. சிலவேளை தெரியாமையாய் வாங்கியிருந்தால் காலை பவிழ்த்துக் காட்டில் விட்டுவிட வேண்டியது. அல்லது பரதேசிகளுக்காவது தத்தஞ்செய்துப் போட வேண்டியது.

குதிரைகளுக்கு சுழிகள் வடுக்கள் அல்லதுஇன் னஞ் சில குறிகளுண்டு. அவைகளும் ஆகாதென்று அறிக. இப்போது அவைகளின் வடிவும் இடமும் பயனுஞ் சொல்லிக்காட்டுவோம்.

1. இடபத்தின் கழுத்தைப்போல தோல்துனுக்காகத் தொங்குமானல் கோசங்கன் என்றுபெயர். அது எஜமான் மனைவியைக் கொல்லும்.

2. ஒருபல்லுக் கொருபல் அதிகப்பட்டிருந்தால் அதிகதந்தா என்று பெயர். அது எசமானைக் கொஞ்சகாலையிற் கொல்லும்.

3. ஒருபல்லுக் கொருபல் குறைந்திருக்குமானல் ஒஃகீன்தந்தம் என்று பெயர். அது எசமான் வீட்டிலிருக்குந் தன்னினங்களை நாசஞ்செய்யும்.

4. முகம் பாம்பினது படம்போ லிருந்தால், அஃகிமுகலி என்று பெயர். அது எஜமான் பெண்

சாதி பந்துவர்க்கங்களிற் சண்டைசச்சரவுகளை யுண்டாக்கி வைக்கும்.

5. கண்கள் பூனைக்கண்களைப்போ லிருந்தால் சாகர் என்று பெயர். இந்தக் குறிப்புள்ள குதிரைகளை வீட்டைவிட்டு நீக்கிப்போட அதிக பிரயாசை படவேண்டும்.

6. தேகம் புலிநிறம்போலிருந்தால் காலயோகா என்று பெயர். அது எஜமானுக்குண்டாகிய சகல சந்தோஷத்தையும் வியாகூலத்தில் மாற்றி வைக்கும்.

7. கழுத்தினுரோம மிரண்டுபிரிவாய்ப் பிரிந்து வலதுபுறத்திலும், ஒன்று இடதுபுறத்திலுமாய் விழுந்திருந்தால் பாலலோசனு என்றுபெயர். அது எசமானை யாத்திரைபோகச்செய்யும்.

8. முகத்தில் நீண்ட ஒருவெள்ளைக்கோடொன்றிருந்து அஃதிரண்டு மூன்று பிரிவாய்ப் பிரிந்திருக்குமாகில் றபின்மெகா என்று பெயர் அது போரில் எஜமானைப் பயப்படுத்துவது மல்லாமல் ஒருபோதும் தன் எஜமான் போர்க்களத்திலிருந்து சவுக்கியமாய் வீடுவந்து சேரச்செய்யாது. அன்றியும் இந்தக் குதிரையின் பொல்லாப்பினுல் தன் எஜமானுடைய படை முறிந்துப்போகும்.

9 முதுகிலொரு நீண்ட வெளுத்தக்கோ டிருக்குமாகில் அறனுக் என்று பெயர். இஃததிக துன்பத்தையுடையதாக விருக்கும். ஆகையால் இதின் முகத்தில் விழிக்கவுங் கூடாது. இதை ஒருபோதும்

வீட்டில் வைத்திருக்கவுங் கூடாது. மேலும் இந்தக் குறியுள்ள குதிரையை வீட்டில் வைத்திருப்பதை விட சத்துருக்களை வைத்திருப்பது நன்மையாக விருக்கும்.

10. மூக்கில் ஒருவடு வெளுத்திருக்குமாகில் க்ஷாரபோகன் என்றுபெயர். இது மிகுந்த பொல்லாங்கைத் தருவதுமல்லாமல் ஒருபோதும்எஜமான் வயறு நிறம்பச் சாப்பிடத்தக்க நிருவாகமில்லாத தரித்திரவானாகவே யிருக்கச்செய்யு .

இன்னமும் இப்படியே இரண்டு காதுக்கிடையில் கொம்புபோல் நீண்டிருந்தாலும், முக்கோணமாயிருந்தாலும், மார்பு இருபிளப்பாய் பிரிந்து காணிலும், ஸ்தனங்களிருந்தாலும், பற்களுக்கிடையில் சிறிய பற்கள் முளைத்திருந்தாலும், முன்னம் பற்களில் வளைந்தபற்களிருந்தாலும், கீழ்பற்களால் மேற்பற்களைக் கடித்துக்கொண்டிருந்தாலும், ஒரு கால் வெளுத்திருந்தாலும், ஓரண்டமுடையதாயிருந்தாலும், அண்டத்தின்மேல் மயிர் முளைத்திருந்தாலும், தாடையி னுட்புறங்களில் கறுத்திருந்தாலும், இரட்டைக்குளம்புக ளிருந்தாலும், உச்சியிற் கறுப்புப் புள்ளி யிருந்தாலும், மார்பில் ஐந்துகோடுகள் தோன்றினுலும், சவாரிசெய்யும்போது முன்னங் காலைத் தூக்கினுலும், மூக்கினது துவாரத்துக்குள் ஒரு வெள்ளைப்புள்ளி யிருந்தாலும், கண்களுக்கு மேல் துவாரம் பருப்புபோல் உண்டைகள் கட்டியிருந்தாலும், முகத்தினது ரோமங்கள் மூன்று பிரிவாய்ப் பிரிந்திருந்தாலும் கெடுதி என்றறிக.

## குதிரைக் கவைப்பவேண்டிய

## மங்களக் குறிப்பு

உதடுகள் நாற்புறமுஞ் சிவந்தும் மடிப்பில்லாமனு மிருதுவாயு மிருக்கவேண்டும். நாவு சிவந்தும் மெல்லியதாயு மிருக்கவேண்டும்.

பற்கள் நெருங்கியும் மழமழப்பாயும், பிகுவாயும் சமனுயுமிருக்கவேண்டும், தாடைகள் மிக நீண்டிராமலும் பருத்திராமலு மிருக்கவேண்டும்.

கண்கள் ஒளியுள்ளதாயு மிருக்கவேண்டும். அல்லாமலும் மான் யானை கிரவுஞ்சபட்சி டிட்டிப்பென்னும்பட்சி ஒட்டை மயில் இவைகளின் கண்களைப் போலவு மிருக்கவேண்டும்.

இமைமயிர்கள் மிருதுவாயும் விசாலமாயும் தெளிவாயு மிருக்கவேண்டும், நெற்றி நல்ல சுழியோடு அமைந்திருக்கவேண்டும்.

சிரசு சமனுயும் விருத்தமாயும் இரண்டு சுழிகளுள்ளதாயு மிருக்கவேண்டும்

செவிகள் குருகியும் கூர்மையாயும் மெல்லியதாயு மிருக்கவேண்டும்.

கழுத்து திடனுயும் வளைந்தும் நீண்டும் இருக்கவேண்டும், பிடரிமயிர் நீண்டிருக்கவேண்டும், மார்பு நீண்டும் அகண்டும் இருக்கவேண்டும், தொடைகள் விருத்தமாயும் சமனுயு மிருக்கவேண்டும்.

முன்னங்கால்கள் மறைந்திருக்கிற முழந்தாள்களை யுடையதா யிருக்கவேண்டும்.

கணைக்கால்கள் விருத்தமாயும் மாமிசமில்லாததாயு மிருக்கவேண்டும்.

குளம்புகள் திடமான மண்டுகத்தை யொத்த தாயும் மழமழப்பாயும் விருத்தமாயும் பருத்துமிரு க்கவேண்டும்.

பக்கங்கள் மிக வுயர்ந்தும் நீண்டும் திடமாயும் சமனாயு மிருக்கவேண்டும். அடிவயறு தாழ்ந்தும் விருத்தமாயு மிருக்கவேண்டும். இடைவிருத்தமாயும் பின்புறம் பருத்து மிருக்கவேண்டும்.

வால் மிருதுவாயும் மழமழப்பாயும் நீண்டும் இருக்கவேண்டும்.

பீசங்கள் கூவிளங்கனியவ்வளவு பிரமாணமுள் ளதாயும் சமனாயும் விருத்தமாயும் மயிரில்லாததாயு மிருக்கவேண்டும். ஆண்குறி கருத்திராமலும் குட் டையாயு மிருக்கவேண்டும். தொடைகள் முன்புறம் ஒழுங்காயும் விருத்தமாயும் கொஞ்சம் வளைந்து மிருக்கவேண்டும்.

பெண் குதிரைகளுக்கு மிதுவே விதி ஆயினும் பெண்குறியும் உதடும் அசைவற்றதாயும் நீண்டதா யும் நன்றாய் அமைந்திருப்பதாயும் ஒழுங்காயும்பரந் ததாயு மிருக்கவேண்டும்.

இவ்விலக்கணங்கள் குறைந்த தேகத்தினை யுடைய குதிரைகள் சுபகரமன்று.

## அளவு இலக்கம்

மூன்று நெல்லளவு கொண்டது ஓரங்குலம், அப்படி இருபத்துநாலு அங்குலங்கொண்டது ஒரு முழம்.

உத்தம குதிரையினுடையமுகம் முப்பத்திரண் டங்குல நீளமிருக்கவேண்டும்.

மத்திம குதிரையினுடைய முகம் முப்பதங்குல நீளமிருக்கவேண்டும்.

அதமகுதிரையினுடைய முகம் இருபத்தெட்டங்குல நீளமிருக்கவேண்டும்.

இப்படியே கழுத்து ஐம்பத்தாரங்குல நீளமிருப்பது உத்தமமென்றும், நாற்பத்தாரங்குல நீளமிருப்பது மத்திபமென்றும், முப்பத்தாரங்குல நீளமிருப்பது அதர்மமென்றுஞ்சொல்லியிருக்கிறார்கள்.

மார்பு இடை இவ்விரண்டும் முகத்தின் அளவையொத்திருக்கவேண்டும் செவிகள் ஏழங்குலநீளமிருக்கவேண்டும். தாடைகளினுட்புறம் ஆறங்குல நீளமிருக்கவேண்டும்.

கணைக்கால்கள் இருபத்திரண்டங்குல நீளமிருப்பது உத்தமம் பதினெட்டங்குல நீளமிருப்பது மத்திபம். பதினாறங்குல நீளமிருப்பது அதமம்.

குளம்புகள் ஏழங்குல நீளமிருப்பது உத்தமமாம். ஆறங்குல நீளமிருப்பது மத்திபம், ஐந்தங்குல நீளமிருப்பது அதமம்.

உயரம் நாலுமுழமிருப்பது உத்தமம். மூன்றரைமுழமிருப்பதுமத்திபம். இரண்டரைமுழமிருப்பது அதமம். நீளம் ஐந்துமுழ மிருப்பது உத்தமம். நான்குமுழ மிருப்பது மத்திபம். மூன்றரைமுழ மிருப்பது அதமமென்றறிக.

## வருணபேதம்

குதிரைகளுக்கு பரிசுத்தநிறமும் கலப்புநிறமுமாக வனேக நிறங்களுண்டு.

இவைகளில் சம்யன் குமைத்து மிஷ்கி கள்ளியா இந்நான்கு நிறமாத்திரம் பரிசுத்தமாம் வெண்மை கருமை செம்மை மஞ்சள் இந்நான்கு நிறங்களோடு மற்ற கலப்புநிறங்கள் யாவும் பரிசுத்தமானதல்ல.

மேற்சொன்ன இந்நான்கு நிறமுள்ள குதிரை மாத்திரம் பராக்கிரமத்தோடு எவ்வளவுதூரம் நடந்தாலும் தயிரியத்தை விடாமல் சகல பிரயாசைகளையும் சகித்துவரும். மற்ற நிறமுள்ள குதிரைகளியாவும் கொஞ்சப்பிரயாசைக்கு இளைத்து வாடித் துவண்டுபோகும். இப்போது இவைகளிற் சில நிறங்களை யெடுத்துக் காட்டுவோம்

குதிரையின் தேகத்துக்கு மயிர்களும் உளையும் * வாலும் தோலும் † குளம்பும்வெளுத்துசங்குபோலிருப்பதற்கு போசுலா என்றுபெயர்.

இன்னமிப்படியே எல்லாம் வெளுத்து தோல் மாத்திரங்கருத்திருப்பது மக்குசினிலாஎன்றுபெயர்

மேற்சொன்ன அவயவங்களெல்லாங் கறுத்திப்பது மிஷ்கி என்று பெயர்.

இவ்வாறே சிவந்திருப்பது சரங் என்றுபெயர்.

உளை வால் தேகத்தின்மயிர் இவைகள் பொன்னிறமாயிருக்குமாகில் ஜர்தா என்று பெயர்.

---

* உளை யென்பது - பிடரிமயிர்.

† மூன்றுகாற் குளம்புகள்வெளுத்து ஒருகால்குளம்பு சிவந்திருந்தால் அக்குதிரையைத் திரும்பிப் பார்க்கவேண்டாம்.

கறுத்துஞ் சிவந்துமிருக்கிற மயிர்கள் இரட்டையான உறுப்புகளிருந்து கால் முகம் வால் உளை இவைகள் சிவந்திருக்குமாகில் மகாசுரம் என்று பெயர்.

வெளுத்துங் கறுத்தும் அல்லது வெளுத்துஞ் சிவந்துமிருக்குமாகில் அபுல்கு என்று பெயர்.

உளை வால் இவைகள் பொன்னிறமாயும் தேகஞ் சிவந்த அத்திப்பழத்தின் காந்திப்போலுமிருக்குமாகில் துறங் என்று பெயர். அல்லது சன்னேரி சுரங்கு என்றும் பெயர்

தலை மயிர் உளை பிருஷ்டம் முழந்தாளுக்குக் கீழ்ப்புறம் இவைகள் பருத்திருந்து தேகமெல்லாம் பொன்னிறமாய் இருக்குமாகில் சியாஜாந்தா என்று பெயர்

தேகமெல்லாம் வெளுத்து ஒரு காதுமாத்திரம் கறுத்திருக்குமாகில் சியாநீலா என்று பெயர்

நாலுகால்களிலும் நெற்றியிலும் ஒருபட்டை நீளமாய் வெளுத்திருக்குமாகில் பஞ்சகல்யாணி என்று பெயர்.

கால் முகம் தலைமயிர் வால் மார்பு இவைகள் வெளுத்து மற்ற தேகமுழுதும் எந்த நிறத்திலிருந்தாலும் அஷ்டகல்யாணி என்று பெயர்.

நாலுகாலும் வெளுத்து நெற்றியில் ஒருவெள்ளை பிறையைப்போல் இருக்குமாகில் சந்திரமூக்குக் கலியா என்றுபெயர்.

நாலுகால் அல்லது இரண்டுகால் மாத்திரம் வெளுத்து நெற்றியில் நீண்ட வெளுப்புண்டாயிருக்குமாகில் தூத்பாது என்று பெயர்.

பக்கங்களில் வெள்ளைப்புள்ளிகளால் சித்திரம் போலிருந்து தேகம் மற்ற எந்த நிறத்தையுடையதாயினும் குல்தார் என்று பெயர்.

வெள்ளைக்குதிரையின் தேகத்தில் சிறிய கறுப்புப் புள்ளியாவது அல்லது மற்ற எந்த நிறத்திலாவது சிறிய புள்ளிகள் நாற்புறங்களிலும் இருந்தால் சினி என்று பெயர்.

இவ்வாறே பருத்த கறுப்புப்புள்ளிகள் இருந்தால் அபுரிஷேன் என்று பெயர்.

தேகமுழுதும் சந்தனநிறமாய் இருக்குமாகில் சம்மன் என்று பெயர்.

கால்கள்மாத்திரங் கறுத்து தேகமுழுதுஞ்சிவந்திருக்குமாகில் குமைத் என்று பெயர்.

தேகமெல்லாஞ் சந்தன நிறமாயிருந்துதலைதொடங்கி வால்வரையில் கறுத்தக்கோடொன்று வந்திருக்குமாகில் குல்லா என்று பெயர்.

கோதும்பை யுமியின் காந்தியிலாவது சிவந்த சந்தனநிறத்திலாவது தேகமுழுதும் நிறைந்திருக்குமாகில் சிங் என்று பெயர்.

தேகம் கோதுமை நெய்யின் காந்தியாயிருந்து தோல் சிவந்திருக்குமாகில் தாமூஷ் என்று பெபர்.

தேகமுழுதும் வெளுத்திருந்தால் நீலா என்று பெயர்.

தேகமுழுதும் சந்தன நிறமாயிருந்து கால்கள் மாத்திரங் கறுத்திருக்குமாகில் சம்மன்சிபா ஜானு என்று பெயர்.

தேகத்தினுரோமங்களானது கருமையும் செம்மையுங் கலந்திருந்து கால்கள்மாத்திரங் கறுத்திருக்குமாகில் தேலியாகுமைத் என்று பெயர்.

உளையும் வாலும் வெளுத்து தேகமுழுதும் சந்தனநிறமாயிருக்குமாகில் ஷாகா என்று பெயர்.

தேகம் பசுமைபோன்ற வெள்ளை நிறமாகில் சஞ்சா என்று பெயர்.

இவ்வாறே பசுமைபோன்ற வெளுப்பில் சித்திரம்போல் புள்ளிகள் பரந்திருக்குமாகில் சப்ஜா என்று பெயர்.

தேகமுழுதும் வெளுத்தசந்தன நிறமாயிருந்து முகமாத்திரம் வெளுத்திருக்குமாகில் நுகரு என்று பெயர்.

இவ்வண்ணமாய் குதிரைகளுக்கனேக நிறங்களுண்டு ஆயினும் மொத்தமாய் எத்தனை நிறங்கள் புறுக்களுக்குண்டோ அத்தனைவகை நிறமுங் குதிரைகளுக்குண்டென்றறிக.

## அவசியமறியும் பலன்

குதிரைகளில் தேகமுழுதும் வெளுத்து அல்லது தேகமுழுதுஞ் சிவந்து முன்கால் பின்னங்கால் முகம் இவை வெளுத்திராநின்ற குதிரைகளைக் கொண்டாடத்தக்கதென் றறியவும்.

அல்லாமலும் தேகமுழுதும் பொன்னிறமாயும் மழமழப்பாயு மிராநின்ற குதிரைகளுக்கு மிதுவே விதி.

அசுவங் கொள்பவர்கள் பனதிற்கு ஓர்வித சமாதானம் தேகம் ஒரே நிறமாயிருந்தாலும் அல்லது பலநிறமாயிருந்தாலும் மெருகோடுங்கூடி மழமழப்பாயிருக்குமாகில் நிறத்தினால் வரும் எல்லாக் குற்றங்களையும் நிவர்த்தி செய்கின்றது. ஏனெனில் மெருகானது சகல நிறங்களினுமுயர்ந்திருக்கின்றது.

சாம்பல் நிறத்தையும் கோணலாய் இராநின்ற வாலையும் ஈபோன்ற நிறத்தையுடைய குதிரைகள் தள்ளப்பட்டிருக்கின்றன கொள்ளாம லிருப்பது நன்மை.

## நாடியறிந்து அதனால் வியாதியை பகுத்தறியும் வகை

மனிதர்களுடைய தேகத்திலுண்டாகுஞ் சகல நோய்களையும் நாடியினாலும் குறியினாலுங் கண்டு கொள்வதுபோல் குதிரையின் வியாதிகளையும் அதன் செவியினாலும் கண்ணினாலும் வாயினாலும் அக்குறியினாலும் கண்டுகொள்ளலாம்.

செவி. குதிரையின் செவி நாடி பார்க்கிறவனுக்கு வேண்டியதாவது தன்கைப் பெருவிரல்தவிர மற்ற நாலுவிரல்களையும் வரிசையாய் ஒன்றாய்ச் சேர்த்து குதிரைச்செவியை மெதுவாய் கைப்பிடிக்குட்பிடித்து பார்க்கவேண்டும். சூடுதோன்றுமாகில் சாரமென்றும் குளிர்மை தோன்றுமாகில் சீதளமென்றும் சூடுங் குளிர்மையுங்கலந்து தோன்றுமாகில் அப்

படியே நோயுங்கலந்திருக்குமென்று எண்ணி அதற்கேற்ற பக்குவங்கள் செய்யவேண்டும்.

கண். கண்களை நீக்கிப் பார்க்கும்போது கண்ணின் இரத்தம்வெளுத்து கண்ணீர்ததும்பிக்கொண்டிருக்குமாகில் குதிரைக்கு வெட்டை பதிகரித்துச் சூடேறியிருக்குதென்றும் இரத்த மஞ்சளித்தாவது வாணநிறத்திலாவது கலந்து தோன்றுமாகில் பித்தசுரமென்றும் கண்களிற் பச்சை இரத்தம் புள்ளியாய்விழுந்திருக்குமாகில் சன்னிபிறந்து தோஷித்து இருக்குதென்றும், கண்களில் இரத்தம் அதிகமாய்ச் சிவந்திருக்குமாகில் வாய்வு அதிகரித்து இருக்குதென்றும், கண்கள் சிவந்தும் கீழ்வயிறும் அண்டமும் வீங்கியிருக்குமாகில் ஜகர்பாத்து உண்டாயிருக்கின்றது என்றெண்ணி அதுக்குத் தகுந்த பக்குவங்கள் செய்யவேண்டும்.

வாய். உதடு வெளுத்து பச்சை நரம்புகள் விம்மி கால்களில் யாதொரு அசைவுமில்லாமல் நீண்டு கண்களினால் நீரோடிவருமாகில் ஜவுகிறு பிறந்திருக்குது என்றும் வயிறு வீங்கி மலசலங் கட்டுப்பட்டுப் படுக்கின்றதும்எழுந்திருக்கின்றதுமாக இருக்குமாகில் பர்கிறு பிறந்திருக்கின்றது என்றும், தாகம் அதிகரித்துக் கொள்ளும், புல்லும் கொஞ்சமாகத் தின்று பெருமூச்செறியுமாகில் ஆப்கிறு பிறந்து இருக்குதென்றும், தேகமுழுவதுஞ் சூடேறி மார்பு கனத்து புல்லுதின்னாமல் கண்களில் நீர் ததும்பிக் கொண்டு தலையைக் கீழே போட்டுவிடுமாகில் குளுமை பிறந்திருக்கின்றது என்றும் எண்ணி அதற்குத் தகுந்த பக்குவஞ் செய்யவேண்டும்.

அக்குள். அக்குளினுடைய துடிப்பானது மெதுவாய் மெலிந்து துடிக்குமாகில் குளிர்மையென்றும் அதிகமும் மரத்தோடுந்துடித்து சூடேழும்பியிருக்குமாகில் தக்டக்காவென்றும் பெயர். இது சொஸ்தமாக மாட்டாது. குதிரையைச் சேதப்படுத்தும். இரண்டு புறத்திலும் அதிக பலமாய்த் துடிக்குமாகில் அதிக சூடு உண்டாயிருக்குது என்றும், இப்படியே இரு புறத்திலுமெலிந்து துடிக்குமாகில் குளுமையென்று எண்ணி அதுக்கேற்ற பக்குவங்கள் செய்யவேண்டும்.

## குதிரைகளுக்கு வியாதியின் குணம்

### பகுத்தறியும் வகை

சாஸ்திரப்படி எழுபத்திரண்டுவித வியாதிகள் உண்டு; அவைகளில் பன்னிரண்டு வியாதிகள் உள் வியாதி என்றும், அறுபது வியாதிகள் வெளி வியாதிகள் என்றும் பிரித்துக் காட்டப்படும்.

## உள் வியாதி

பன்னிரண்டு வியாதிகளும் குதிரை வைத்திருக்கிறவர்களை யல்லாமல் மற்றொருவருக்குந் தெரியாது. ஆனதால் குதிரை வாங்குகிறவர்கள் ஒருவாரம் அல்லது இரண்டு வாரம் வரையில் குதிரையை வீட்டில் கட்டிவைத்திருந்து இந்த வியாதிகளை அறியவேண்டும்.

1. குதிரையின் தேகத்திலும் முதுகிலும் ஒருவித வலியுண்டாகி அதினால் வாயிலிருந்து ஒருவித சப்தமொன்று சப்திக்கும். அதை செவிகொடுத்து கவனமாய் அறியவேண்டியது.

2. இருந்தாப்போல் இருந்து குதிரையின் தேகத்தில் ஒரு தூசுபோலப் படர்ந்து மறுபடியும் மறைந்து போகும் இப்படியே தோன்றுவதும் மறைவதுமாகவே யிருக்கும் அதை குதிரைக் கழுவும்போது கண்டுணரவேண்டும்.

3. அப்படியே தேகத்தில் வீக்கம் தோன்றுவதும் மறைவதுமாகவே யிருக்கும் மாலீசு பண்ணும்போது தெரியவரும்.

4. குதிரை சவாரிசெய்து திரும்பி வந்தவுடனே இரத்தநீர் விடும் மறுபடியும் ஒருநாட்சென்று சுபாவ நீர்விடும்

5. குதிரை பசியில்லாமல் கொள்ளும் புல்லும் கொஞ்சமாகத் தின்னும் கட்டுத்தறியில் மிரண்டுக் கொண்டே யிருக்கும்.

6. குதிரைக்குத் தலைநோயுண்டாகி வாயினால் மஞ்சள் நீர் ஓடிக்கொண்டிருக்கும் மறுபடியும் அமர்ந்துக்காட்டும்.

7 குதிரையின் கண்களில் நீரோடிவருவதும் நின்றுபோவதுமாக யிருக்கும். மறுபடியும் இமைகளை மூடிமூடித்திறக்கும்.

8. குதிரைக்கு இரண்டுநாளைக்கு ஒருதரம் இரவுகாலங்களில் வயற்றில் நோயுண்டாகி அதினால் அதிக உபத்திரவத்தைக் கொடுத்து பகற் காலங்களில் சொஸ்தப்பட்டுப்போகும் இப்படியே அடிக்கடித் தொடர்ந்து நிற்கும்.

9. குதிரை இரவு முழுவதும் முன்னங்கால்களை நீட்டிக்கொண்டே படுத்திருக்கும் தலையை அசைத்துக்கொண்டிருக்கும்.

10. குதிரைக்கு இரவுமுழுவதும் பெருமூச் செறிந்து சூரிய உதயத்துக்கு மாறிப்போகும்.

11. குதிரைக்கு * குளிர்மையினால் இரவுமுழு தும் இருமலுண்டாகி பொழுது விடிந்தவுடனே நின்றுபோகும்.

12. குதிரைக்கொருவித வாய்வுண்டாகி இர ண்டொருநாளைக்கொருதரம் நொண்டும் வியாதி இன்ன தென்றறியாமல் பலவித அவிழ்தப் பிரயோகத்தால் குதிரையை வருத்தப்படுத்தி உபயோகத்துக்கு வரா மற் செய்துவிடுவார்கள்.

## குதிரைகளுக்கு பேதிக்குக்கொடுக்கும் விபரம்

### பெரியகுதிரைக்குப் பக்குவம்

| | | |
|---|---|---|
| அரியபோளம் | பலம் | முக்கால் |
| சுக்கு | ,, | 1 |
| சவுக்காரம் | ,, | 1 |

இம்மூன்று தினுசுகளையும் அரைத்து தேன்வார் த்து உண்டைசெய்து அதிகாலையில் உள்ளுக்குப்போ டவும் சொகுசாய் பேதியாகும் தாகமுண்டானால் வெந்நீர் ஆறவைத்து நாலுதரங் காட்டவும் பேதி அதிகப்பட்டால் நாலுதுலாம் சுக்கு கொண்டுவந்து சூரணஞ்செய்து ஒரு விராகனிடை அபினி சேர்த்து கொஞ்சந்தண்ணீர்விட்டுக் கலந்து அனலில்வைத்து லேகியமாகக் கிண்டி ஒரு உண்டைசெய்துக் கொடு க்கவும் பேதி நிற்கும்.

---

* குதிரையை சவாரியிலிருந்து அவிழ்த்தவுட னே குளிர்ந்தசலங் காட்டுவதினால் இரவில் இருமல் உண்டாவதற்குக் காரணம்.

## பேதியாகாத பெரியகுதிரைகளுக்கு

### பக்குவம்

| | | |
|---|---|---|
| கரியபோளம் | துலாம் | 3 |
| சுலாபாகிழங்கு | ,, | 1 |
| கொடிமுந்திரியுப்பு | ,, | 1 |
| ரூபார்பு | விராகனிடை | 1 |
| சுக்கு | ,, | 1 |

இவைகளை தேன்விட்டரைத்து முந்தி பதனமாய் வைத்துக் கொண்டு பேதிக்குகொடுக்கும் முதல்நாள் வழக்கமாய்காட்டுங்கொள்ளைநிறுத்தி மறுநாள்காலை சரியாய் நாலுமணிக்கு மேற்படி பவிழ்தத்தை உள்ளுக்குக் கொடுத்துவிட வேண்டும். மறுபடி காலை 8-மணி துவக்கி சாயரட்சைவரையில் வேண்டுமளவும் வெந்நீர்காட்டவும் தீபத்துக்குமுந்தி பேதிதுவக்கி மறுநாள் 10-மணிவரையில் நன்றாய்பேதியாகும் அன்றையதினம் நாலுதரம் வெந்நீர் காட்டவேண்டும் மறுபடி பேதியாகும். பின்பு பேதி நிறுத்துவதற்கு நாலுதுலாஞ் சுக்கு கொண்டுவந்து சூரணஞ்செய்து அதோடு ஒருவிராகனிடை அபினிசேர்த்து கொஞ்சந் தண்ணீர் விட்டுக் கலந்து அடுப்பில்வைத்து இலேகியம்போற் கிண்டி யுண்டைசெய்து கொடுக்க பேதி கட்டுப்படும். அடுத்து மூன்றுநாள்வரையில் காலைமாலை வழக்கக் கொள்ளுக்கு கொஞ்சங் குறைத்துக் காட்டி வரவேண்டும். மத்தங்காப்புல் சேரவொட்டாமல் பார்த்து வரவும்.

## மட்டகுதிரைகளுக்கு பேதி மருந்து

| | | |
|---|---|---|
| கரியபோளம் | பலம் | 1 |
| சுக்கு | ,, | முக்கால் |
| சவ்க்காரம் | ,, | ,, |

மற்ற பிரயோகம் மேற்கண்டபடி சரியாய் நடத்தவும்

## நாட்டுத்தட்டுக்கு பேதிமருந்து

| | | |
|---|---|---|
| கரியபோளம் | பலம் | 1 |
| சுக்கு | ,, | 1 |
| சவுக்காரம் | ,, | 1 |

மேற்கண்ட பக்குவஞ் செய்துக்கொள்ளவும்.

பேதிக்குக் கொடுக்கும்படி மேற்கண்ட அளவுப்பிரமாணப் பிரயோகஞ்செய்யும்பொருட்டு குதிரைகளுக்குத் தக்கபடி விபரங்கண்டிருக்கின்றது.

## நாலுசாதி குதிரைகளுக்குங் கொடுக்கும் ஓர்வித பேதிமருந்து

கரியபோளம் பலம்-1, நன்றாய் பொடிசெய்து நல்லவெல்லத்தில் வைத்து மேய்க்கவும். ஒருநாளிரண்டுநாள் மூன்றுநாள் பேதியாகும் அப்பால்நிற்கும் இரண்டுவேளேயும் வெந்நீர்காட்டவும் கொள்ளுகாட்டக்கூடாது.

### அதிகபேதியானல்

| | | |
|---|---|---|
| வாய்விளங்கம் | சேர் | $\frac{1}{4}$ |
| மிளகு | ,, | $\frac{1}{4}$ |
| சுக்கு | விராகனிடை | 1 |

இம்மூன்றும் நன்றாயிடித்து உள்ளுக்குப் போடவும் உடனேபேதிநிற்கும் பேதி நின்ற உடனே மஞ்சள்சேர்-1, சுக்கு-விராகனிடை-3, பொடிபண்ணி அந்தப்பொடியில் குக்கிலம் விராகனிடை-3 பொடிசெய்துப்போட்டு வெள்ளாட்டுக்கோமயத்தில் குழப்பிக் கொடுக்கவும் காசாகொடுத்து உடம்பை நன்றாய்ப்பிடிக்கவும் இப்படி மூன்று நாளைக்கு இரண்டு

வேளையும் மேய்த்து அப்பால் நாலுநாளைக்கு ஒரு வேளை மேய்த்து கொள்ளு காட்டவும் ஒருவேளை குளிர்ந்தஜலங் காட்டவும்.

## வெளிவியாதி அறுபதையும் பிரிவாய் பிரித்து காட்டுவோம்

## சூலைகள் பதினெட்டு

1. குதிரை கீழேவிழுந்து மூச்செறிந்து யிரண்டு விலாவும் ஒன்றோடொன்று சொருகிக்கொண்டிருக்குமாகில் சஞ்வர்த்தசூலை என்று பெயர்

பக்குவம்

| | | |
|---|---|---|
| பூவரசங்கொட்டை | விராகனிடை | 9 |
| சோரி | ,, | 4 |
| அஜவான் | ,, | 4 |
| மாவலிங்கப்பட்டை | ,, | 4 |
| காயம் | ,, | 3 |
| நெய் | பலம் | 8 |

இவைகளில் நெய்தவிர மற்றவைகளை வஸ்திரகாயஞ்செய்து நெய்யிற்கலந்து மூன்று தட்டிடையுண்டைசெய்து ஏழுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை மூன்றுநாளைக்கு நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும். மேற்படி வெந்நீர் குளிர்ந்தசலம்போல ஆறியிருக்கவேண்டும்.

வேறு-பக்குவம்

| | | |
|---|---|---|
| ஓமம் | விராகனிடை | 9 |
| சுக்கு | ,, | 9 |

| | | |
|---|---|---|
| திப்பிலி | விராகனிடை | 9 |
| அமுக்கருங்கிழங்கு | ,, | 9 |
| காயம் | ,, | 9 |
| குல்கந்து | ,, | 9 |
| நெய் | சேர் | 1 |

இவைகளை வஸ்திரகாயஞ் செய்துநெய்யிற்கலந்து கொட்டைப்பாக்குப் பிரமாணம் உண்டைசெய்து 9. நாளைக்குக்கொடுக்க சொஸ்தமாகும். பத்தியம்முன் சொன்னதுபோல நடத்திவரவும்,

2. குதிரை யடிக்கடி நிலத்தை முகர்ந்துக்கொண்டும் விலாவிரண்டுபுறமு மிழுத்துக்கொண்டு மிருக்குமாகில் மத்துருவர்த்தசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| திப்பிலியரிசி | விராகனிடை | 9 |
| கஞ்சேல் | ,, | 9 |

இவைகளை பொடி செய்து காடித்தண்ணீரில் கலந்துகொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

3. குதிரை மேழேவிழுந்து அடிக்கடி வாயினால் ஒருவிதச் சத்தமாகச் சத்திக்குமாகில் சூதாவாத சூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கருசிராங்கண்ணிவேர் | விராகனிடை | 9 |
| பூவரசங்கொட்டை | ,, | 9 |
| தட்டைப்புங்கங்கொட்டை | ,, | 9 |
| இந்துப்பு | ,, | 9 |
| ஆமணக்கெண்ணெ | சேர் | 1 |

இவைகளில் எண்ணை தவிர மற்றவைகளைப்பொடி செய்து எண்ணெயிற்கலந்து கொடுக்கும்போது கால் சேர் பசுமாட்டின் தயிர் அதோடு சேர்த்துக் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளுநீக்கி வெந்நீர் ஒருவேளை கொடுக்க வேண்டும் சொஸ்தமானபின்பு கொள்ளுங் குளிர்ந்த ஜலமுஞ் சேர்த்துக்கொள்ளலாம்.

4. குதிரையடிக்கடி உட்காருகிறதும் படுக்கிறதுமாகவிருந்து வாலை வயிற்றிற் சொருகிக் கொள்ளுமாகில் வாதசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வசம்பு | விராகனிடை | 9 |
| கோஷ்டம் | ,, | 9 |
| பாஷாண | ,, | 9 |
| இந்துப்புவெல்லம் | ,, | 6 |

இவைகளைக் கொண்டுவந்து பொடி செய்து ஒரு சேர் கஞ்சிக்காடியில் கலந்துக்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

5. குதிரை மூக்கிலிருந்து நீர் இரத்தம்போற் சிவந்து நிற்காமல் ஓடிவந்து கீழேவிழுந்து போகுமாகில் இரத்தப்பிரமியசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வாழைக்கிழங்கின்சாறு | சேர் | 1 |
| பசுவின்பால் | ,, | ½ |

இவை யிரண்டுங் கலந்து உள்ளுக்குக் கொடுத்து மூக்கிலுங் குற்றிவரவேண்டும். பின்பு முள்ளியிலை பிடி-3, கத்தரிக்காய்-2. இவையிரண்டுஞ்சேர்த்துத்

துவைத்து மூன்றுவேளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

6. குதிரையின் நாபியிழுத்துக்கொண்டு கீழே விழுந்து கால்களுதறிக்கொள்ளுமாகில் கன்மசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வசம்பு | விராகனிடை | 9 |
| கோஷ்டம் | ,, | 9 |
| பூவரசங்கொட்டை | ,, | 9 |
| ஓமம் | ,, | 9 |
| காயம் | ,, | ½ |
| பழம்புட்டி | ,, | 1 |

இவைகளில் வெல்லந்தவிர மற்றவைகளைப்பொடி செய்து வெல்லத்திற் கலந்து மூன்றுண்டை செய்து மூன்றுவேளைக் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர்மாத்திரம் கொடுக்கவேண்டும்.

7. குதிரை கீழே விழுந்தும் கால்களை உயர்த்திக்கொண்டும் வயிற்றை முகர்ந்துக்கொண்டு மிருக்குமாகில் நாசாவர்த்தசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| காயம் | விராகனிடை | 4 |
| இந்துப்பு | ,, | 9 |
| பனைவெல்லம் | சேர் | 1 |

| | | |
|---|---|---|
| தயிர் | சேர் | 1 |
| பசுவின்பால் | விராகனிடை | 18 |

இவைகளில் மேற்சொன்ன காயமுதலியவைகளை ப்பொடிசெய்து வெல்லம் தயிர் பால் இவைகளோடு கலந்து மூன்றுநாளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

குதிரை பருத்திருந்தால் கொள்ளை நீக்கிவை க்கவேண்டும் இளைத்திருந்தால் வழக்கத்திற் பாதி கொள் கொடுக்கவேண்டும்.

8. குதிரை யடிக்கடி உட்காருகிறதும் எழுந்தி ருக்கிறதுமாகவிருந்து மூச்செரிந்து அடிக்கடி வலமி டம்பார்த்துக்கொண்டும் புல்தின்னாமலு மிருக்குமா கில் பாதாவர்த்தனூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| காயம் | விராகனிடை | 4 |
| வாய்விளங்கம் | ,, | 9 |
| வசம்பு | ,, | 9 |
| பசுவின்சாணம் | கொஞ்சம் | |

எருமைமயிரில்நெய்தகம்பளஞ் சுட்டசாம்பல்பிடி-1

இவைகளையெல்லா மொன்றாய்ச்சேர்த்துக்கொடு க்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

9. குதிரை கொள்ளும் புல்லுஞ் செவ்வையாய்த் த்தின்னாமலிளைத்துப்போய் எந்நேரமும் நோயுள்ள தாயிருக்குமாகில் சர்தபாமசூலை என்று பெயர்.

பக்குவம்

நல்லெண்ணெயும் நெய்யும் சரிபாகமாய்ச் சேர்த்து நன்றாய்க் கலந்து தேகமுழுதும் சூடெழும்பத் தேப்த்து வெய்யலில் கட்டிவைக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| பின்பு பனைவெல்லம் | சேர் | 1 |
| மஞ்சள் | விராகனிடை | 8 |
| சுக்கு | ,, | 9 |
| கடுக்காய் | ,, | 9 |
| நெய் | சேர் | 1 |

இவைகளில் நெய்தவிர மற்றவைகளைப் பொடிசெய்து நெய்யிற் கலந்துக்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

10. குதிரை வாயினு லெங்நேரமும் மஞ்சள்நீரோடிக்கொண்டு குதிரைக்கதிகமாக வேர்த்து வேர்வையில் முழுகிப்போகுமாகில் நகன்சூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| பேகே | விராகனிடை | 9 |
| அல்வந்து | ,, | 9 |
| சுக்கு | ,, | 9 |
| திப்பிலி | ,, | 9 |
| நஞ் | ,, | 9 |
| பாலின்பால் | சேர் | 5 |

இவைகளிற் பால்தவிர மற்றவைகளைப் பொடி செய்து பாலிற்கலந்து மூன்று நாளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

11. குதிரை யடிக்கடி இலத்திப்போட்டுக்கொண்டு மலதுவாரத்தை யடிக்கடி கடித்துக்கொண்டிருக்குமாகில் ஆத்திசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| இலுப்பைப்புண்ணாக்கு | துலாம் | 8 |
| சாட்டரணைவேர் | ,, | 8 |
| விளக்கெண்ணை | ,, | 8 |

இவைகளில் எண்ணை தவிர மற்றவைகளை வேரு யரைத்து எண்ணையிற்கலந்துக்கொடுத்து பின்புமலத்துவாரத்தி லொருகூடுபோட சொஸ்தமாகும் பத்தியமில்லை.

12. குதிரை வாலை அடிக்கடி முறுக்கிக்கொண்டிருக்குமாகில் குஷ்குசூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| திப்பிலி | வராகனிடை | 9 |
| மிளகு | ,, | 9 |
| காயம் | துலாம் | $\frac{1}{4}$ |
| நெய் | சேர் | 1 |

இவைகளை நெய்யிற்கலந்து மூன்றுநாளைக் கிடைவிடாமற் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளைக் காட்ட வேண்டும்.

13. குதிரை வலமிட மனிதர்களை விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டும் அடிக்கடி உட்கார்

ந்துக்கொண்டும் வயிரதிகமாகவிரைந்துக்கொண்டும் மகாபயத்தோடும் அச்சத்தோடும் நிற்குமாகில் அபூகாருலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | விராகனிடை | 9 |
| திப்பிலி | ,, | 9 |
| சுக்கு | ,, | 9 |
| கல்யாணமுருங்கிலை | ,, | 3 |

இவை நான்கும் ஒன்றுயரைத்து * சாராயத்திற் கலந்துக்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

14. நான்கு காற்களிலும் வயிற்றின்கீழும் வீக்கங்கண்டு தேகமுழுதுங் காச்சலுண்டா யிருக்குமாகில் ஆகாபசுலை என்று பெயர்.

| | | |
|---|---|---|
| வாழைத்தண்டின் துண்டு | | 1 |
| இஞ்சி | சேர் | 1 |
| வெங்காயம் | ,, | 1 |
| ஏலரிசி | பலம் | 1 |
| சீரகம | ,, | 1 |
| வெந்தியம் | ,, | 1 |
| நெல்லிக்காய் | ,, | 4 |
| பிரண்டை | பிடி | 1 |
| பனைவெல்லம் | பலம் | 40 |
| தயிர் | சேர் | 1 |

* அருக்குபட்டை இலை நீக்கி பிருந்தி சேர்த்தால் வியாதிக்கு அதிக பலன்.

| | | |
|---|---|---|
| முருங்கப்பட்டை | பிடி | 1 |
| எலுமிச்சப்பழம் | | 20 |

இவைகளில் தயிர்தவிர மற்றவைகளையிடித்துதயிரில்கலந்து அடுப்பில்வைத்து தேங்காய்ப்பிரமாணம் உண்டை செய்து மூன்றுநாளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

15. குதிரைக் கால்களில் பிடிப்புண்டாகி நரம்புகளெல்லாஞ் சுருட்டிக்கொண்டு காலெடுக்கமாட்டாமல் அப்படியே எடுக்குமாகில்கால்களிலதிகநோயுண்டாகி நடக்கும்போது கால்களில் சிட்டுசிட்டென்றுசத்தமுண்டாகுமானால் கட்டுசூலையென்றுபெயர்

பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | 5 |
| வசம்பு | ,, | 5 |
| பூண்டு | ,, | 5 |
| குண்டுமணி | ,, | 1 |
| படிகாரம் | ,, | 1 |
| முருங்கப்பட்டை | ,, | 6 |
| காயம் | ,, | 1 |
| கடுகு | ,, | 4 |
| குருசானியோமம் | ,, | 3 |

இவைகளை நன்றாயிடித்து அதிற் கொஞ்சஞ் சேவலினெச்சம் சேர்த்து எலுமிச்சங்காய்ப்பிரமாணம் உண்டை செய்து ஏழுநாளைக்கு இரண்டு வேளையும் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

---

* பட்டை செதுக்கும் முருங்கமரம் 20-வருஷத்துக்கு மேற்பட்டதா யிருக்கவேண்டும்.

16. குதிரைக்கு திடீரென்று இரத்தநீர் காணு மாகில் நகத்துசூல் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| நற்சீரகம் | துலாம் | 2 |
| பெருஞ்சீரகம் | ,, | 2 |
| கொத்தமல்லி | ,, | 2 |
| நெல்லிமுள்ளி | ,, | 6 |
| ரோஜாப்பூ | ,, | 2 |
| பொட்டலுப்பு | ,, | 1 |

இவைகளைப் பொடிசெய்து தேன் கலந்து மூன்று உண்டை செய்து இடைவிடாமல் மூன்று காலைக்குக் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வைக்கவேண்டும்.

17. குதிரைக்கதிக பேதிகண்டு யெழுந்திருக்க த்தள்ளாமல் விழுந்து விழுந்து போனாலும் படுத்த படுக்கைபோடுகெழிந்துக்கொண்டாலும் இராக்கட்ட சூலை என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | 2 |
| சீரகம் | ,, | 2 |
| கடுகு | , | 2 |
| சுக்கு | ,, | 2 |
| கடுக்காய் | ,, | 2 |
| சாதிக்காய் | ,, | 1 |
| பனைவெல்லம் | ,, | 20 |
| எலுமிச்சம்பழம் | ,, | 20 |
| தயிர் | சேர் | 1 |

இவையெல்லாம் ஒன்றுய் சேர்த்தரைத்துமூன்று காலைக்கு இரண்டு வேளையுங் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

18. குதிரைக்கு இருந்தாப்போலிருந்து வயிறு வீக்கங் கொடுத்து இசவுகண்டு கொள்-புல்-ஒன்றுந் தின்னுமல் இலத்தி மூத்திரங் கட்டுப்பட்டு மிகுந்த உபத்திரவத்தோடும் உட்காருகிறதும் எழுந்திருக்கிறதுமாக விருக்குமாகில் வாதவர்தகுலை என்று பெயர்.

பக்குவம்

| | |
|---|---|
| கடுகுரோகணி | சேர் $\frac{1}{4}$ |
| திப்பிலிமூலம் | ,, காலரிக்கா |
| அபினி | துலாம் அரை |

இவையெல்லாமொன்றுய்ச்சேர்த்து சாராயத்திற் கலந்து மூன்று வேளைக் கொடுக்க சொஸ்தமாகும் பேதியாகும் வியாதி விரவிற்குணமாகும் அப்படிக்கு சொஸ்தபடாகாவிட்டால்.

வேறு-பக்குவம்

| | |
|---|---|
| பசுவின்பால் | சேர் $\frac{1}{4}$ |
| விளக்கெண்ணை | ,, அரிக்கால் |

இவையிரண்டுஞ் சேர்த்துக்கொடுக்க உடனேபேதியாகும் பேதியாகாவிட்டால் குதிரை சேதப்படும்

மேற்சொன்ன பதினெட்டு குலைவியாதிகளெல்லாங்குதிரைக்கு அண்டாமல் மூன்றுமாதம் அல்லது ஆறுமாதத்துக்கு ஒருவிசை கொடுத்துவரு மசாலா

| | | |
|---|---|---|
| மாவிலிங்கப்பட்டை | விராகனிடை | 9 |
| ஓமம் | ,, | 9 |

மகஜேசாக்கர்கொட்டை விராகனிடைநாலரை

| | | |
|---|---|---|
| இந்துப்பு | ,, | 9 |
| முள்ளி | ,, | 9 |
| பனைவெல்லம் | ,, | 30 |

இவைகளில் வெல்லங்கவிர மற்றவைகளைப்பொடி செய்து வெல்லத்திற் கலந்து பெரிய எலுமிச்சங்காய்ப் பிரமாணம் உண்டை செய்து மூன்று நாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சகலசூலையுஞ் சொஸ்தமாகும். அதிசப்பசியுண்டாகும் கொள்ளும் புல்லும் அதிகமாய்த் தின்று புஷ்டியாகும் இஃததிகப் பிரயோசனமுள்ள அவிழ்தமாகவிருக்கும்.

## வெளிவியாதி

கண்கள் விழிக்கமாட்டாமல் தண்ணீரோடிக் கொண்டேயிருக்கும் அதை கவனமாய்ப் பாராவிட்டால் சதைவளர்ந்து மூடிக்கொள்ளும்.

## உள்ளுக்குமருந்து

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 2 |
| சவுக்காரம் | ,, | 2 |
| வெல்லம் | ,, | 2 |
| அபினி | ,, | 1 |

இவையெல்லாங் கலந்தரைத்து ஒன்றரைத்துட்டிடையுண்டைசெய்து உள்ளுக்கொடுத்து பின்பு கால்சேர் பசுவின்பால்கொண்டுவந்து அதோடுகால் சேர் தண்ணீர்விட்டுக்கலந்து காச்சும்போது ஒருவிராகனிடை படிகாரம் பொடிசெய்துப்போட்டு நன்றாய்க் காய்ந்தபின்பு வெள்ளைச்சீலையில் துவைத்துத்

துவைத்து கண்களுக்கு மூன்றுநாளைக்கு ஒத்திட சொஸ்தமாகும்.

பத்தியம்

2. புதுப்பல்லவிரில் இரண்டு பலம் நாமக்கட்டி வாங்கி சுத்தஜலத்திற்போட்டு நன்றாய்க் கரைத்துத் தெளியவைத்து மூன்றுபலம் பொட்டலுப்பை கல்வத்தில்நேகவரைத்து ஷை தண்ணீரிற்போட்டு கால் மணிநேரங் கையால் நன்றாய்ச் சிலுப்பி அந்தத்தண்ணீரில் வெள்ளை சவுக்கத் துவாலையை நனைத்துகுதிரைக் கண்களின்பேரில் கட்டிவிட்டு காயகாய மேற்படி தண்ணீரை விட்டுக்கொண்டே வரவேண்டியது இப்படி நாளொன்றுக்கு பதினலுதரஞ் செய்துவர சொஸ்தமாகும

பக்குவம்

3. பூதற்தெ கோலாற் (கோலாற் பிலாக்) இந்த மருந்தை நன்றாயரைத்து தண்ணீரிற்போட்டு கலக்கித் துணியைத் துவைத்துத் துவைத்து கண்ணின் பேரில் போட்டுக்கொண்டு வரவும் சொஸ்தமாகும் இந்த மூன்று முறையுங் குதிரைக்கு அதிக சூடுண்டாகி வெப்பத்தினல் காணும் வியாதியென்றறிக.

கண்களில் வெள்ளையாய் முளை காணுமாகில்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| சுக்கு | துலாம் | 6 |
| வசம்பு | ,, | 6 |
| பூண்டு | ,, | 6 |
| இந்துப்பு | ,, | 3 |

| | | |
|---|---|---|
| கடுகுரோகணி | துலாம் | 3 |
| தாமரைக்கிழங்கு | சேர் | ½ |

இவைகளைத் தேனிலரைத்து இரண்டு துட்டிடை புண்டைசெய்து பதினொருநாளைக்கு இரண்டுவேளை யும் உள்ளுக்குக் கொடுத்து.

| | | |
|---|---|---|
| பன்பு பொரித்தபடிகாரம் | துலாம | 3 |
| பனங்கற்கண்டு | ,, | 2 |

இவையிரண்டையும்பொடிசெய்து வேளைக்குஒரு சிட்டிக்கி கண்களிற்போட சொஸ்தமாகும்.

கண்கள் அதிகமாய்ச் சிவந்தும் அதின்மாமிசம் வெர்த்திருக்குமாகில்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகுரோகணி | துலாம் | 3 |
| கோஷ்டம் | ,, | 3 |
| பானைத்திப்பிலி | ,, | 3 |
| ஓமம் | ,, | 3 |
| பூண்டு | ,, | 3 |
| விஷ்ணுகாந்தியிலை | ,, | 3 |
| தூதுவளையிலை | ,, | 3 |
| பொன்னாங்கணியிலை | ,, | 3 |

இத்தினுசுகளை தேன்விட்டரைத்து இரண்டுதுட் டிடை புண்டை செய்துஇரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வென்னீர் ஒருவேளைக் காட்ட வேண்டும்

| | | |
|---|---|---|
| பின்பு மயில்துத்தம் | விராகனிடை | 1 |
| பாஷாணம் | அரிசிபிரமாணம் | |
| பொரித்தபடிகாரம் | துலாம் | 1 |

இவைகளில்முதல் துத்தம் பாஷாணம்இரண்டை யும் பொரித்துப் பொடிசெய்து படிகாரஞ்சேர்த்து வேளைக்கொரு சிட்டிக்கி கண்களிற்போட சொஸ்த மாகும்.

கண்களில் மாமிசம் வளர்ந்துவருமாகில் மூஞ் சா என்று பெயர்

பக்குவம்

| | | |
|---|---|---|
| கோஷ்டம் | துலாம். | 4 |
| கடுகுரோகணி | ,, | 4 |
| சுக்கு | ,, | 4 |
| பொரித்தவெண்காரம் | ,, | 4 |
| இந்துப்பு | ,, | 4 |
| காட்டுச்சீரகம் | ,, | 4 |
| வெல்லம் | ,, | 6 |
| மலைவேம்பின்கொழுந்து | பிடி | 1 |

இவைகளை வெல்லஞ்சேர்த்தரைத்துஇரண்டுதுட் டிடை யுண்டைசெய்து இரண்டி வேலையுங் கொடுக் கவும்

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவும்.

அல்லாமலும் கண்களில் வளர்ந்திருக்குமாமிச த்தைமெதுவாய்க் கத்தியினால் சத்திரமிடவேண்டும் கூடாமையாயிருந்தால் இந்தப்பக்குவஞ் செய்யவே ண்டும் அதாவதுபூவரசங்கொட்டைவெள்ளைக்குன்

டுமேணிவேர் இவையிரண்டையும் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து பதினொரு நாளைக்கு இடைவிடாமல் ஒரு விராகனிடைச் சாத்து கண்ணிலிட மூஞ்சாகும்.

இரண்டாவது

| | | |
|---|---|---|
| பொரித்தபடிகாரம் | துலாம் | 1 |
| கற்கண்டு | ,, | 1 |
| கோழிமுட்டையின்மேலோடு | ,, | 1 |
| பீங்கான் வளையலோடு | | |
| பொடி | பணவிடை | 2 |

இவையெல்லாம் நன்றாயரைத்து வேளைக்கொரு பணவிடை தேனிற் கலந்து கண்ணிற்போட வளர்ந்திருக்கு மூஞ்சாரீங்கி சொஸ்தமாகும்.

## குதிரைகளுக்கு கண்ணில் புழு விருக்கு

மாங்கில் பக்குவம்

சோரங் கொட்டையை கத்தியிற் குத்திக்கொண்டு விளக்கில் காச்ச தயிலமிறங்கும் அந்த தயிலத்தை பசுவின் வெண்ணெயிற்குழப்பி சிமிழிலடைத்துக்கொள்ளவும் புழுவாடுகிற கண்ணிலே ஒருநாளைக்கு மேற்படி மையைப்போடவும் மறுநாள் செந்தூரத்தை ஈயச்செப்பில் போட்டுக்கொண்டு மேற்படி சேராங்கொட்டை மையை கண்ணிலேபோட்டு உடனே சிறு புளியங்கொட்டை பிரமாணம் செந்தூர மையைப்போடவும் அப்பால் ஒருநாளைக்கொருதரம் ஈயச்செந்தூரமாத்திரம் போட்டு வரவுஞ் சொஸ்தமாகும்.

## குதிரைகளுக்கு எழுவகைச்சுரங்களுண்டு

1. குதிரையின் தேகமெல்லாந் தழும்புத் தழும்பாயிருந்து மூச்செரிந்து கொள்ளும் புல்லுங் கொஞ்சமாகத் தின்னுமாகில் பித்தசுரமென்று பெயர்.

### பக்குவம்

முதல் குதிரைகழுத்தில் நரம்புகுத்தி ஒருசேர் இரத்தம் வெளிப்படுத்தியபின்பு.

| | | |
|---|---|---|
| மிளகு | சேர் | ¼ |
| சுக்கு | ,, | காலரிக்கா |

இவையிரண்டையும் நெய்யில் அரை வறுப்பாக வறுத்துக்கொண்டுமூன்றுபிடிநிலாவிளாவிளையோடு கலந்தரைத்து மூன்றுண்டை செய்துமூன்று நாளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும்.

### பத்தியம்

கொள்ளை நீக்கி புல்லுந் தண்ணீரும் வழக்கப்படி போற் கொடுக்க வேண்டும்.

2. குதிரை தேகமெங்குஞ் சூடெழும்பிமூச்செரிந்து கட்டியிருக்குமிடத்தில் அதிக சோம்பலாக நின்று கொள்ளும் புல்லுங் கொஞ்சமாகத் தின்னுமாகில் சூட்டைப்பற்றிய சுரமென்று பெயர்.

### பக்குவம்

| | | |
|---|---|---|
| குருசானியோமம் | துலாம் | 3 |
| திப்பிலி | ,, | 3 |
| நற்சிரகம் | ,, | 1 |
| பெருஞ்சீரகம் | ,, | 1 |

இவைகளில் நற்சீரகம் பெருஞ்சீரகம் இவையிரண்டையு மாத்திரம் அரை வருப்பாக வறுத்துக்கொண்டு மற்ற சரக்குகளோடு மூன்றுபிடி துளசியிலை சேர்த்தரைத்து மூன்றுண்டை செய்து மூன்று வேளை கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளைக் காட்ட வேண்டும்.

3. குதிரைக்கு நாசியினால் நீரோடிக்கொண்டு மூச்செரிந்து தண்ணீர் குடியாமலும் கொள்ளு தின்னாமலுமிருக்குமாகில் வாதசுரம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கஸ்தூரிமஞ்சள் | துலாம் | 2 |
| கோஷ்டம் | ,, | 2 |
| கடுகுரோகணி | ,, | 2 |
| சுக்கு | ,, | 2 |
| மிளகு | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 |
| யாளிவிரை | ,, | 1 |
| மைசாட்சி | ,, | 1 |
| பொரித்தவெங்காரம் | ,, | 1 |
| பொரித்தபடிகாரம் | , | 1 |
| காயம் | விராகனிடை | 1 |

இவைகளை முருங்கப்பட்டை சாற்றிலரைத்து ஏழுண்டை செய்து மூன்றுநாளைக்கு இரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

4. குதிரைக்கு திடீரென்று தேகமெல்லாம்நடுக்கமுண்டாகி புல் தின்னாமல் அசந்திருக்குமாகில் வாதசுரம் என்று பெயர்.

பக்குவம்

முதல் குதிரைமுகத்திற் குத்தி முக்கால் சேர் இரத்தம்வாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| மிளகு | துலாம் | 4 |
| மைசாட்சி | ,, | 4 |
| திப்பிலிமூலம் | ,, | ½ |
| திப்பிலியரிசி | ,, | 1 |
| மஞ்சள் | ,, | 8 |
| வெங்காரம் | ,, | 1 |
| காயம் | ,, | ½ |

இவைகளை சிறுநீரிலரைத்து பதினொருண்டை செய்து ஆறுநாளைக்கு இரண்டுவேளையுங்கொடுக்கச் சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளைக் காட்ட வேண்டும்.

5. குதிரை அக்குளிலதிக துடிப்புண்டாய் பக்கம் விலா இவைகளிழுத்துக்கொண்டு மூச்செறிந்து கட்டுத்தறியி லதிகபடபடப்பாய் சுழன்று சுழன்று வந்தால் தடக்காசுரம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | துலாம் | 5 |
| சுக்கு | ,, | 5 |
| பெருஞ்சீரகம் | ,, | இரண்டரை |
| நற்சீரகம் | ,, | இரண்டரை |
| பூவரசங்கொட்டை | ,, | 2 |

இதுகளை பகைவறுப்பாகவறுத்துக்கொண்டுமூன் றுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்த மாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவும்.

6. குதிரை கொள்ளும் புல்லுஞ் செவ்வையாய்த்தின்னுமலுந் தண்ணீர் செவ்வையாய்க் குடியாமலும் வாயினால் நீரோடிக்கொண் டிருக்குமாகில் கடுவரசுரம் என்று பெயர்.

பக்குவம்

முதல் குதிரை அதிக புஷ்டியாயிருந்தால் இரண்டுசேர் வரையிலும் இளைத்திருந்தால் அரைசேர் வரையிலும் இரத்தம்குத்தி வாங்கியபின்பு,

| | | |
|---|---|---|
| வெட்பாலையரிசி | துலாம் | 1 |
| குருசானியோமம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| ஸ்ரீ-ஸ்ரீபதி | ,, | 2 |
| சருபித்தா | ,, | 2 |
| காட்டுச்சீரகம் | ,, | 2 |

| | | |
|---|---|---|
| கடுகுரோகணி | ,, | 2 |
| சதகுப்பை | ,, | 1 |

இவைகளை மூன்றுபிடி கழைக்கோட்டியிலையோ டரைத்து எழுண்டை செய்து மூன்றுநாளைக்கு இரண்டுவேளையு மிடைவிடாமற் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

7 குதிரையின் வயிற்றில் அதிக இரைச்சலுண்டாகி அடிக்கடி சிறுநீர் விட்டுக்கொண்டுவேர்வையினால் மூழ்கிக் கொள்ளும் புல்லும் பிரியமாய்த் தின்னுமல் அதிக வுறக்கமாயிருக்குமாகில் ஜகர்பாதசுரம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வாய்விளங்கம் | துலாம் | 3 |
| பூவரசங்கொட்டை | ,, | 3 |
| சுக்கு | ,, | ஒன்னரை |
| மிளகு | ,, | ஒன்னரை |
| கருஞ்சீரகம் | ,, | ஒன்னரை |
| கடுகுரோகணி | ,, | 4 |
| காட்டுச்சீரகம் | ,, | 4 |
| மிளகாய் | ,, | 1 |
| புகையிலை | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 |
| காயம் | ,, | ½ |

இவைகளை மூன்றுபிடி துளசியிலையோ டரைத்து 14-உண்டைசெய்து 7-நாளைக்கு இரண்டுவேளையும் இடைவிடாமற் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

## மூன்கண்ட எழுவலைகசுரத்துக்குமுண்டாகு மடையாளங்கள்

குதிரையின் வாயில் காற்றமுண்டாகி யிரண்டு காதின்மத்தியில் அதிக சூடாகி தேகமெல்லாந் தழும்புதழும்பாயு மிருக்குமாகில் இதினதாபுஜர் என்று பெயர்.

### பக்குவம்

| | | |
|---|---|---|
| வாழைக்கிழங்கு | துலாம் | 18 |
| தாழைவிழுது | ,, | 18 |
| கற்றாழைத்தோல் | ,, | 18 |
| நாவற்பட்டை | ,, | 18 |
| நெல்லிக்காய் | ,, | 18 |
| கொத்துமல்லி | ,, | 18 |

இவைகளை நாலுசேர் மாதளைவேர் சாற்றில் வேக வைத்து இரண்டுசேர் சாறுசுண்டினபிறகு சுண்டின இரண்டு சேர் சாற்றை வடித்து மூன்றுவேளைக்குக் கொடுக்க சகல சுரமுந்தீரும்.

### வேறு-பக்குவம்

| | | |
|---|---|---|
| சிந்திற்கொடி | துலாம் | 9 |
| கொத்தமல்லி | ,, | 9 |
| சன்மித்ரா | ,, | 9 |
| சுக்கு | ,, | 9 |
| ஏலம் | ,, | 9 |
| பேரீச்சங்காய் | ,, | 9 |
| கைபாந்தகரை | ,, | 9 |
| காய்ந்தவேப்பிர்க்கு | ,, | 9 |

இவைகளில் மூன்றுசேர் தண்ணீர்விட்டு ஒருசே ராகும்படியாய்க் காய்ச்சிறக்கி வடிகட்டிஇரண்டுவே ளைக்கொடுக்க சகல சுரமுந்தீரும்

## குதிரைகளுக்குச் சம்மந்தப்பட்ட வாய்வுகளின் விபரம்

1. குதிரை யிருந்தாப்போலிருந்து வயிற்றில் வலியுண்டாகி படுக்கும் எழுந்திருக்கும் பிரண்டு உருண்டு காட்டும்.

பக்குவம்

ஒருகுத்து தும்பயிலை
கல்லுப்பு பிடி 2

இவைகளிரண்டையும் இடித்து மேய்ப்பிக்கவும் வயிற்றுவலி நீங்கும்.

பத்தியம்

ஒருவேளை கொள்ளை நீக்கி புல்லுந் தண்ணீருங் கொடுக்கவும்.

2 குதிரை யிருந்தாப்போலிருந்து வாய்வினு லும் அல்லது பாரீசவாய்வினாலும் நாலுகாலு மசை யாமலிருந்தாலும் அல்லது ஒருகால் அசையாமலிரு ந்தாலும் தலையை சாய்த்துக்கொண் டிருந்தாலும் இப்பேர்ப்பட்டவாய்வுக்கெல்லாம் கைகண்டமுறை

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | இரண்டரை |
| குக்கிலம் | பலம் | இரண்டரை |
| சாராயம் | திரும் | 8 |

மஞ்சளைப் பொடி செய்து குக்கிலேகூடப்போட்டு இடித்து சாராயம்விட்டுப் பிசரி பதினறு உண்டை செய்து 7-நாளைக்கு காலே மாலே இரண்டுவேளையுங் கொடுக்க குணங்காட்டும்.

பத்தியம்

தண்ணீரைக் கொதிக்கவைத்து பின்பு ஆறவைத்து ஒருசாமங் காட்டவும் மறுபடியு முதல்நாள் ஒருமூச்சுத் தண்ணீர் இரண்டாநா ளிரண்டு மூச்சுத் தண்ணீர் மூன்றுநாள் குடிக்கிறமட்டுங் காட்டவேண்டியது கொள்ளு நீங்கலாகா புல்மாத்திரம் புஷ்டியாய் போட்டு வரவேண்டியது. காலேயிலு மாலேயிலும் முட்டச்சாம்பலே பொடிசெய்து வைத்துக்கொண்டு தேகமெல்லாம் பரவப்பூசி இரண்டாள்விட்டு நன்றாய்ப் பிடிக்கவும் மறுபடி முதல்நாள் இரவும்பகலும் குதிரையைப் படுக்க வொட்டாமல் ஆள்வைத்து பார்த்துக்கொண்டு இரண்டாம் நாள் மருந்து குடுத்தபின் காலேயிலும் மாலேயிலும் குதிரையை மயில்துாமுலாத்தி லாயத்தில்கட்டவும் வாய்வு பாந்தோடிப்போம்.

3. குதிரை தேகத்தி லிருந்தாப்போ லிருந்து நடுக்முண்டாய் தோல் முறப்பேறி கெட்டியாயிருக்குமாகில வாதமென்றறிக.

பக்குவம்

முதல் இரத்தம்குத்திவாங்கி பின்பு

| | | |
|---|---|---|
| மிளகு | துலாம் | 3 |
| கடுகு | ,, | 3 |

| | | |
|---|---|---|
| பூண்டு | துலாம் | 3 |
| பொரித்ததுரிசு | ,, | ¼ |
| காயம் | ,, | ¼ |

இவையெல்லாஞ் சாராயத்தி லரைத்துமூன் றுண்டைசெய்து 3-வேளைக்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளைக்காட்டவேண்டும்.

4. குதிரைக்கு பந்தவாய்வினால் மூச்செறிந்துக்கொண்டு கொள் புல் தின்னாமலுமிருந்தால்.

பக்குவம்

10-சேர் மஞ்சளை நன்றாய் பொடிசெய்து 10-சேர் நெய்யைக் காயவைத்து கொதிக்கிறபோது மஞ்சட்பொடியை போட்டுக் கிளறி ஒருபானையில் வைத்துக்கொண்டு காலையிலும் மாலையிலும் ஒரு விளாங்காய் பிரமாணம் கொடுத்துவரவும் சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீங்கலாக ஒருவேளைக்குமாத்திரம் வெந்நீர்காட்டவும் இப்படி பத்துநாளைக்குக்காட்டி அப்பால் குளிர்ந்த சலங்காட்டவும் மருந்து முடிந்தவுடனே வெந்நீர்விட்டுக் குளிப்பாட்டவும்.

5. குதிரையின் வயிற்றிலிரைச்சலுண்டாகிஇலத்தி மாட்டுச்சாணம்போலுண்டாகி அதிக ஜலத்தை விரும்புமாகில் கோட்டவாதமென்று பெயர்.

பக்குவம்

முதலகத்திய மிரத்தங்குத்தி வாங்கிபின்பு,

| | | |
|---|---|---|
| சுக்கு | துலாம் | 5 |
| மிளகு | ,, | 5 |
| கடுகுரோகணி | ,, | 5 |
| திப்பிலிமூலம் | ,, | 5 |
| பூண்டு | ,, | 5 |
| காயம் | ,, | 5 |

இவைகளை முருங்கப்பட்டை சாற்றிலரைத்து உண்டைசெய்து 3-நாளைக்கு கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

ஒருசேர் கொள்ளு மொருவேளை வெந்நீருங் கொடுக்கவேண்டும்.

6. குதிரைக்கு வயிறிழுத்துக்கொண்டு அசைவில்லாமலும் புல்தின்னாமலும் தலைக்கீழேபோட்டுவிடுமாகில் அற்னவாத மென்றுபெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | சேர் | ¼ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | ¼ |
| மைசாட்சி | ,, | ¼ |
| வாய்விளங்கம் | ,, | ¼ |
| சோஷ்டம் | ,, | ¼ |
| கடுகுரோகணி | ,, | ¼ |
| பொரித்தபடிகாரம் | துலாம் | 2 |
| பொரித்தவெங்காரம் | ,, | 2 |

| | |
|---|---|
| காயம் | துலாம் 1 |
| சாராயஞ் | சேர் 1 |

இவைகளில் சாராயர்தவிர மற்றவைகளை வஸ்திர காயஞ்செய்து அரைச்சேர் சாராயத்தில் மூன்று துட்டிடை பொடிபோட்டுக் கலந்து முதல்நாள் கொடுத்து மற்றப்பொடியை மற்ற அரைசேர் சாராயத்திற் கலந்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து மூன்றுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சௌஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளைக்காட்டவேண்டும்.

7 குதிரை தன்பற்களால் தன்தேகத்தைப்படிக் கடி கடித்துக்கொள்ளுமாகில் சினக்குவாதம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 8 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | 8 |
| மைசாட்சி | ,, | 8 |
| வாய்விளங்கம் | ,, | 8 |
| மிளகு | ,, | 8 |
| கோஷ்டம் | ,, | 8 |
| கடுகுரோகணி | ,, | 8 |
| வாலுளுவையரிசி | ,, | 8 |
| பூவரசங்கொட்டை | ,, | 9 |
| பொரித்தவெங்காரம் | ,, | 2 |
| பொரித்தபடிகாரம் | ,, | 2 |
| இந்துப்பு | ,, | 6 |
| காயம் | ,, | ஒன்னரை |

இவைகளை சங்கேசரிலைச்சாற்றிலரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து எழுநாளைக்கு இரண்டு வேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்

பத்தியம்

வழக்கத்திற்பாதி கொள்ளும் வெந்நீருங்கொடுக்கவேண்டும்.

8. குதிரையின் தேகத்தில் உரோமங்களெல்லாம் சிலிர்த்துக்கொண்டும் நீர் மஞ்சளித்தும் கொள்ளு தின்னாமலும், புல்லின்பேரில் பிரியமில்லாமலும் அதிக சோம்பலாகயிருக்குமாகில் வாய்வுசேர்ந்த கடுவாதம் என்றுபெயர்

பக்குவம்

முதல் இரத்தங்குத்தி வாங்கினபின்பு,

| | | |
|---|---|---|
| கடுகு | துலாம் | 6 |
| மைசாட்சி | ,, | 6 |
| கடுகுரோகணி | ,, | 6 |
| கந்தபிர் | ,, | 1 |
| பரங்கிப்பட்டை | ,, | 1 |
| காயம் | விராகனிடை | 1 |

இவைகளை பேய்ப்பீர்க்கிலைச் சாற்றில் அரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து ஒருவேளைக் கொடுக்கவேண்டும் வியாதி பலமாயிருந்தால் இரண்டுவேளைக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

6. குதிரைக் கண்களில் வெள்ளையாய்ப் பீளை சாடிக்கொண்டு கொள்ளுதின்னாமல் மூச்செறிந்து அதிக சோம்பலாக யிருக்குமாகில் வாதசீதளம் என்று பெயர்.

பக்குவம்

முதலில் இரத்தங்குத்தி வாங்கி பின்பு.

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 1 |
| மிளகு | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 |
| பூண்டு | ,, | 1 |
| கடுகுரோகணி | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 |

இவைகளைச் சாராயத்தில் அரைத்து சிறிய எலுமிச்சங்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து இருபத்திரண்டு வேளைகொடுக்க சொஸ்தமாகும் பத்தியம் இல்லை.

10. குதிரை முன்னங்காலிரண்டுந்தாங்கி நடந்தாலும் உடனேயானாலும் ஆறுமாதம் ஒருவருடம் அல்லது இரண்டு வருடம் நீமத்திருந்தாலும் சாலவாய்வு என்றுபெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகு | சேர் | 5 |

கடுகை மாவாயரைத்துக்கொண்டு சரிபாகமாய் உப்பை நுணுக்கிக்கொண்டு இரண்டையுங்கலந்து சேதமில்லாமல் மேய்க்கவும் இப்படி ஒருநாள் சூரிய உதயத்துக்கு மேய்த்து நாலுநாழிகைக்கு ஒருதரம் அஸ்தமிக்கிரவரைக்கும் வெந்நீர் காட்டவும் மூன்றுநாளைக்கு கொள்ளு நிறுத்தவும் மறுநாள்.

| | | |
|---|---|---|
| மிளகு | சேர் | ¼ |
| பூண்டு | ,, | ¼ |
| சுக்கு | ,, | ¼ |

இவை மூன்றையுஞ் சூரணமாக்கிக்கொண்டுதண்ணீர்விட்டுப் பிசைந்து உதபத்துக்கு மேய்க்கவும் மறுநாளுதயத்தில் குளிர்ந்த ஜலங்காட்டவும் வாய் வுக்கி சகங்கொடுக்கும் பத்தியமில்லை.

11. குதிரையின் இரண்டு கண்களுஞ் சிவந்தும் மஞ்சளித்தும் பீளையானது சிவந்நிறமாயும் மஞ் சன்நிறமாயுமோடி கார்ச்சலுண்டாய் கொள்ளின்பேரிலும் புல்லின்பேரிலும் இச்சையில்லாமலிருக்குமாகில் வாய்வைச்சேர்ந்த ஜகர்பா என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகு | துலாம் | 5 |
| காட்டுச்சீரகம் | ,, | 5 |
| மைசாட்சி | ,, | 5 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | 5 |
| பரங்கிப்பட்டை | | இரண்டரை |
| சுக்கு | ,, | இரண்டரை |
| ஓமம் | ,, | இரண்டரை |
| பூவரசங்கொட்டை | ,, | இரண்டரை |
| கருஞ்சீரகம் | | இரண்டரை |
| சிற்றரத்தை | | இரண்டரை |
| சேராங்கொட்டை | | இரண்டரை |
| வாய்விளங்கம் | | இரண்டரை |
| கடுரோகணி | ,, | $1\frac{1}{4}$ |
| கரியபோளம் | ,, | $1\frac{1}{4}$ |
| வெட்பாலையரிசி | ,, | $1\frac{1}{4}$ |
| திப்பிலியரிசி | ,, | $1\frac{1}{4}$ |
| சவுக்காரம் | ,, | $1\frac{1}{4}$ |
| வெங்காரம் | ,, | $1\frac{1}{4}$ |

| | | |
|---|---|---|
| பார்ப்பாரமுள்ளி | சேர் | $\frac{1}{4}$ |
| கட்டசாம்பல் | ,, | $\frac{1}{4}$ |

இவைகளை கொட்டக்கரந்தையிலைச் சாற்றி லரைத்து மூன்று துட்டிடையுண்டைசெய்து ஏழு நாளைக்கு இரண்டுவேளையு மிடைவிடாமற் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும். குதிரை யதிகமாக யிளைத்திருக்குமாகில் வழக்கத்திற் பாதி கொள் கொடுக்கவேண்டும்.

12. குதிரையினிடுப்பில் நோயுண்டாகி யதி னல் வருத்தப்பட்டு பின்காலால் நடந்தாலும் கொள்ளும் புல்லுந்தின்று வந்தும் அதிக பலவீன மாக விருந்தாலும் சூலாவங்கு என்று பெயர்.

பக்குவம்

முதலிரத்தங்குத்தி வாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{4}$ |
| சேராங்கொட்டை | ,, | $\frac{1}{4}$ |
| புளிவிரை | ,, | $\frac{1}{4}$ |
| மைசாட்சி | ,, | $\frac{1}{4}$ |
| வசம்பு | ,, | அரிக்கால் |
| மேதாலக்குடி | ,, | அரிக்கால் |

| | | |
|---|---|---|
| பூண்டு | ,, | ¾ |
| வெல்லம் | ,, | ¾ |

காலுமாதக் கோழிக்குஞ்சையறுத்து மயிர் குடல் எலும்பு முதலியவைகளை நீக்கி அரைசேர் நல்லெண்ணெயிற் பொரித்துக்கொண்டு மேற் சொன்ன சரக்குகளை வஸ்திரகாயஞ்செய்து இரண்டு துலாம் இஞ்சியை அரைத்துக்கொண்டு பொரித்த மாமிசத்தோடு சேர்த்துப் பிசைந்து பெரிய எலுமிச் சங்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து நாற்பது நாளைக்கு முதலிருபதுநாளைக் கிரண்டுவேளையாய்க் கொடுத்தபின்பு இருபதுநாளைக்கு ஒருவேளையாய்க் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

துவக்கத்தில் மூன்றுநாள் வரையில் கொள்ளை நீக்கி வெந்நீர் கொடுக்கவேண்டும்.

13 குதிரையினுடைய கண்ணின்கீழும் மூக் கின்மேலும் வீக்கங்கண்டுகொள்ளும் புல்லும் வழக் கப்படி தின்றுவந்தாலும் அசாத்தியகுணந்தோன்று மாகில் கெஜவாய் என்று பெயர்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | துலாம் | 3 |
| மைசாட்சி | ,, | 3 |
| ஆளிவிரை | ,, | 3 |
| மிளகு | ,, | 3 |
| நல்லவெல்லம் | ,, | 3 |

| | | |
|---|---|---|
| பேரீச்சங்காய் | துலாம் | 1½ |
| வெந்தியம் | ,, | 1½ |
| கடுகுரோகணி | ,, | 1½ |
| வெட்பாலையரிசி | ,, | 1½ |
| பூண்டு | ,, | 1½ |
| பெருஞ்சீரகம் | ,, | 1 |
| கொத்தமல்லி | ,, | 1 |
| ரோசாப்பூ | ,, | 1 |
| சீரகம் | ,, | ½ |
| காயம் | ,, | ½ |

இவைகளை முடக்குத்தீர்த்தானிலைச் சாற்றி லரைத்து இரண்டுதுட்டிடை உண்டைசெய்து மூன்றுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

14. குதிரை நாளுக்குநாள் இளைத்து நீர் மஞ்சளாக கொஞ்சங் கொஞ்சமாய்விட்டு கொள்ளும் புல்லு மதிகமாகத்தின்றும் அதிக பலவீனமாக விருக்குமாகில் இரத்த மூறைந்தவாதமென்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | துலாம் | 7 |
| கடுகுரோகணி | ,, | 7 |
| காட்டுச்சீரகம் | ,, | 7 |
| திப்பிலியரிசி | ,, | 7 |
| பூண்டு | ,, | 8 |
| திப்பிலிமூலம் | ,, | 4 |

| | | |
|---|---|---|
| வாய்விளங்கம் | துலாம் | 4 |
| கருஞ்சீரகம் | ,, | 4 |
| சித்திரமூலம் | ,, | 4 |
| வெட்பாலையரிசி | ,, | 4 |
| கோஷ்டம் | ,, | 3 |
| மைசாட்சி | ,, | 3 |
| படிகாரம் | ,, | 3 |
| வெங்காரம் | ,, | 3 |
| சமைழகோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 9 |
| அமுக்கனாங்கிழங்கு | ,, | 2 |
| மஞ்சள் | ,, | 8 |
| நாய்வேளைவிரை | ,, | 4 |
| சுக்கு | ,, | 4 |
| வசம்பு | ,, | 4 |
| கடுகு | ,, | 4 |
| ஓமம் | ,, | 4 |
| கந்தபிர் | ,, | 11 |

இவைகளைச் சாராயத்திலரைத்து மூன்று தட்டிடைடை யுண்டைசெய்து 7-நாளைக்கு இரண்டு வேளை கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

15. குதிரை யண்டத்தி லொன்று பருத்தும் நீண்டும் மற்றொன்று சிறுத்தும் விலா விருபுறத்திலு மிழுத்துக்கொண்டு அடிக்கடி பூமியிற்புரண்டு அதிக உபத்திரவப்படுமாகில் அண்டவாய்வென்று பெயர்.

பக்குவம்

முதல் குதிரைக்கண்டவாய்வு இடப்புறமிருந்தால் வலப்புறமும், வலப்புறமிருந்தால் இடப்புறமுமிரத்தங்குத்திவாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| மைசாட்சி | துலாம் | 5 |
| பறங்கிப்பட்டை | ,, | 5 |
| ஓமம் | ,, | 5 |
| சராயித்தா | ,, | 5 |
| சித்திரமூலம் | ,, | 5 |
| கடுகுரோகணி | ,, | 5 |
| வெள்ளெருக்கன் வேர்ப்பட்டை | ,, | 5 |
| காயம் | ,, | 5 |

இவையெல்லா மரைத்து உண்டைசெய்து மூன்று நாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

16. குதிரையின் தேகத்து நரம்புகளெல்லாம் பிருவாயிழுத்துக்கொண்டு மேலெழும்பி குதிரை வில்லைப்போல் வளைத்துக்கொண்டு கொள் புல் தின்னவும் தண்ணீர் குடிக்கவும் சக்தியில்லாமல் உபத்திரவப்படுமாகில் அர்த்தங்கவாதம் என்று பெயர்.

பக்குவம்

முதல் குதிரையின் மார்பிலிருபுறமுமிரத்தங் குத்திவாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | $\frac{1}{4}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{4}$ |
| கோஷ்டம் | ,, | $\frac{1}{4}$ |
| கடுகுரோகணி | ,, | $\frac{1}{4}$ |
| மைசாட்சி | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலிமூலம் | ,, | $\frac{1}{4}$ |
| வாய்விளங்கம் | ,, | $\frac{1}{4}$ |
| கடுகு | ,, | $\frac{1}{4}$ |
| கர்புபீர் | ,, | $\frac{1}{4}$ |
| பேரீச்சங்காய் | ,, | $\frac{1}{4}$ |
| பூண்டு | ,, | 5 |
| இந்துப்பு | ,, | 5 |
| பொரித்தவெங்காரம் | ,, | 5 |
| காயம் | ,, | 8 |

இவைகளைச் சாராயத்திலரைத்து மூன்றுதுட்டிடை யுண்டைசெய்து பதினொருநாளைக்கு இரண்டு வேளையுங் கொடுக்க நரம்புகள் தளர்ந்து சொஸ்தமாகும்.

பத்தியம்

மூன்றுநாள்வரையில் கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளைகாட்டி குதிரையை காற்றுப்படாதவிடத்திற் கட்டிவைக்கவேண்டும்.

17 குதிரையின் தேகத்தி லதிக நோயுண்டாய் தேகமெல்லாம் நடுங்கித் துடிப்புண்டாகி அதிகபசி யுண்டாயிருக்கினும் பலவீனத்தால்

கொள்ளும் புல்லுந் தின்னுமலும் கைகா லசைவில்லாமலு மதிக சோம்பலாயிருக்குமாகில் ஜுமாவாய் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | ½ |
| மைசாட்சி | ,, | ½ |
| மேதாலக்குடி | ,, | ½ |
| சோராங்கொட்டை | ,, | ½ |
| கடுகு | ,, | ¼ |
| கடுகுரோகணி | ,, | ¼ |
| திப்பிலிமூலம் | ,, | ¼ |
| கரியபோளம் | ,, | ¼ |
| பனைவெல்லம் | ,, | ¾ |
| வெண்காரம் | துலாம் | 1 |
| கிராம்பு | ,, | 8 |

இவைகளைத் துளசியிலைச் சாற்றிலரைத்து இரண்டு தட்டிடை உண்டைசெய்து ஏழு நாளைக்கு இரண்டு வேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

18. குதிரைக்கு வயிறு வலிகண்டிருந்தாலும் நீர்விடாதிருந்தாலும் இலத்தி போடாதிருந்தாலும் இன்னவிதவாய்வு என்று கண்டுபிடிக்காதிருந்தாலும் இப்பேர்ப்பட்ட வியாதிக்கெல்லாங் கைகண்ட முறை.

பக்குவம்

| | | |
|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 9 |
| மிளகு | ,, | 9 |
| ஓமம் | ,, | 9 |
| பூண்டு | ,, | 6 |

இவையெல்லா மொன்றாயிடித்து மேய்த்து உடனே வண்ணான் வெள்ளாவிவைத்த உவர்த்தண்ணீரில் ஒருபடி தண்ணீர் உள்ளுக்குக் கொடுக்கவுங் குணமாம்.

பத்தியம்

இரண்டுநாளைக்கு கொள்ளை நீக்கிவைக்கவும்.

## மேற்கண்டவியாதிக்கு வேறொரு

பக்குவம்

பிரண்டையை யிடித்து ஒரு விளாங்காய்ப் பிரமாணம் யெடுத்துக்கொண்டு அதில் ¼-ஆழாக்கு உப்பு கூடச்சேர்த்து இரண்டையுங் கலந்து நேக அரைத்து உள்ளுக்கு கொடுக்க குணமாகும் இதுவுங் கைகண்ட முறை.

வேறு-பக்குவம்

தும்பயிலையைப் பிடிங்கிவந்து கால்அரிக்கா ஆழாக்கு உப்புபோட்டுத் துவைத்து தேங்காயளவு பிரமாணங் கொடுக்கவுங் குணமாகும்.

வேறு-பக்குவம்

அவரையிலையைத் துவைத்து அரை ஆழாக்கு உப்புசேர்த்து தேங்காயளவு பிரமாணங் கொடுக்க சொஸ்தமாகும்.

## பாசிஞவின் விபரம்

பாசிஞவென்பது ஒருவித வீக்கத்துக்குப் பெயர். அந்த வீக்கமானது அதிகமாய்க் குதிரையின் கால்களில் தோன்றும்.

1. குதிரையின் வலது காலிலாவது இடது காலிலாவது குளம்பருகில் வீக்கந் தோன்றும் அதனுடைய வருத்தத்தால் காலைப் பூமியிலூன்ருமல் மூன்றுகாலால் நிற்குமாகில் சிறுதபாசிஞ என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| பாஷாணம் | துலாம் | 2 |
| மிளகு | ,, | 2 |
| கோஷ்டம் | ,, | 1 |
| நீர்முள்ளிவிரை | ,, | 1 |
| வெள்ளரிவிரை | ,, | 1 |
| வெண்காயவிரை | ,, | 1 |
| ஸ்ரீ ஸ்ரீபதிவேர் | ,, | ½ |
| அமுக்கிஞங்கிழங்கு | ,, | ½ |
| கடல்நுரை | ,, | 5 |
| பனவெல்லம் | சேர் | ¼ |

இவைகளைப் பொடிசெய்து வெல்லத்திற் கலந்து உண்டைசெய்து ஐந்துவேளை கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

## இந்த வீக்கத்துக்கு ஒத்தடங்கொடுக்கும் விபரம்

கோதுமை யுமிகொண்டுவந்து நிதமதிற் காற்சேர் உமியை சிறுபிள்ளை சிறுநீரில் நன்ருய்

வேகித்து வீக்கத்தின்மேலொத்திட்டு பின்பு கொடி உமியை வீக்கத்தின்மே லிடைவிடாமல் மூன்று நாளைக்கு வைத்துக்கட்ட சொஸ்தமாகும்.

2. குதிரைக் குளம்புக்குள்ளே ரணமாகி அதினால் தண்ணீரோடி யதிக துற்கந்தமுண்டாகி அந்த வுபத்திரவத்தால் பூமியில் நிற்கக்கூடாமலிருக்குமாகில் பாசினு என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| றுபார்பு | துலாம் | 2 |
| பரப்பாரமுள்ளிவிரை | ,, | 2 |
| பேய்க்கும்மட்டிவிரை | ,, | 2 |
| வெள்ளறுகுவேர் | ,, | 3 |
| கருவேப்பிலை | ,, | 2 |
| இஞ்சி | ,, | 2 |
| வருத்தங்கிப்பட்டை | ,, | 2 |
| பசுவின் நெய் | ,, | 8 |

இவைகளைப் பொடிசெய்து நெய்யிற் கலந்து ஆறண்டைசெய்து மூன்றுநாளைக்குக் கொடுத்துப் பின்பு மயில்துத்தம் துலாம்-8 கொண்டுவந்து எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து ஒருவாரம் வரைக்குங் காயத்துக்குப்போட சொஸ்தமாகும் பத்தியமில்லை.

3. குதிரைக் குளம்பின் உள்மூளை யழுகிப் போய் அக்குள்ள மாம்சமெல்லாங் கெட்டு அதினாலதிக துற்கந்தமுண்டாகி அந்த உபத்திரவத்தால் காலை பூமியில் வைக்காமலிருக்குமாகில் பாதரோகம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகு | துலாம் | 2 |
| ஓமம் | ,, | 2 |
| காட்டுச்சீரகம் | ,, | 2 |
| வாய்விளங்கம் | ,, | 3 |
| மிளகு | ,, | 3 |
| மிளகாய் | ,, | 1½ |
| மைசாட்சி | ,, | 1½ |
| கடுகுரோகணி | ,, | 1½ |
| கழைக்கோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 1½ |
| கரியபோளம் | ,, | 1½ |
| பறங்கிப்பட்டை | ,, | 1½ |
| புகையிலை | ,, | 1½ |
| திருகுகள்ளிகணுவு | ,, | 30 |

இவைகளில் முதற் கள்ளியை வைக்கோலிற் சுத்தி வதக்கிக்கொண்டு மற்ற சரக்குகளோடு சேர்த்தரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளையுங் கொடுத்துப் பின்பு,

| | | |
|---|---|---|
| மயில்துத்தம் | துலாம் | 8 |
| பொரித்தபடிகாரம் | ,, | 8 |

இவை யிரண்டையும் பொடிசெய்து குளம்பின் காயத்துக்குள்ளில் மிருக்கிறவரையில் மருந்தைப் போட்டடைக்கச் சொஸ்தமாகும் பத்திய மில்லை.

4. குதிரைக் குளம்புக்குள்ளிருக்கு மாமிசமெல்லாம் பச்சையிறச்சியைப்போலாகி ஏதாகிலுங்

கொஞ்சமலைசவுண்டால் இரத்தமோடிவரும் அதி னால் அதிக உபத்திரவப்பட்டு இரவும் பகலுமொரு காலைத் தூக்கிக்கொண்டு மூன்றுகாலால் நிற்குமா கில் சுமத்குருவென்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| காட்டாமணக்கின்விரை | சேர் | $\frac{1}{4}$ |
| பூவரசன்விரை | ,, | $\frac{1}{4}$ |
| சேராங்கொட்டை | ,, | $\frac{1}{4}$ |
| கடுகுரோகணி | ,, | $\frac{1}{4}$ |
| மூங்கில்விரை | ,, | $\frac{1}{4}$ |
| பேய்க்குமட்டிவிரை | ,, | $\frac{1}{4}$ |
| இஞ்சி | ,, அரிக்கால் | |
| பொரித்தவெண்காரம் | துலாம் | 8 |
| பச்சரிசிமாவு | சேர் | $\frac{1}{2}$ |
| கோதும்பைமாவு | ,, | $\frac{1}{2}$ |

இவைகளைச் சிறுபிள்ளைகள் சிறுநீரிலரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து நாற்பது நாளைக்கு இரண்டுவேளையுங் கொடுத்து பின்பு,

| | | |
|---|---|---|
| பாஷாணம் | துலாம் | $1\frac{1}{2}$ |
| மயில்துத்தம் | ,, | $1\frac{1}{2}$ |
| கற்பூரம் | ,, | $1\frac{1}{2}$ |
| படிகாரம் | ,, | $1\frac{1}{2}$ |
| அப்பனாகாரம் | ,, | $1\frac{1}{2}$ |
| கத்தகாம்பு | ,, | 2 |
| வங்காளக்கடுக்காய் | ,, | 3 |

| | |
|---|---|
| சேராங்கொட்டை | 7 |
| துவர்பாக்கு | 7 |

இவைகளைச் சுட்டுச் சாம்பல்செய்து நிதமொரு துலாந்தூள் காயத்திற்போட்டு சீலைகட்ட சொஸ்த மாகும்.

### பத்தியம்

குதிரை இளைத்துப்போகாம லிருக்கும்படியாய் வழக்கத்திற் பாதி கொள் கொடுக்கவேண்டும்.

### ஜகர்பாது

1. குதிரை யடிக்கடி உட்கார்ந்து கொள்ளும் புல்லுந் தின்னுமலதிக வேசாராயிருக்குமாகில் ஈரலைப்பற்றிய ஜகர்பா என்றுபெயர். இந்த வியாதி மிகவுங் கடினமாயிருக்கும்.

### பக்குவம்

| | | |
|---|---|---|
| வாலுளுவையரிசி | துலாம் | 9 |
| அக்கிராகாரம் | ,, | 9 |
| கோஷ்டம் | ,, | 9 |
| தந்தக்காரம் | ,, | 9 |
| சரியவோளம் | ,, | 9 |
| அப்பளாகாரம் | சேர் | $\frac{1}{4}$ |
| படிகாரம் | ,, | அரிக்கால் |
| பனைவெல்லம் | ,, | $\frac{1}{4}$ |
| பொரித்தவெண்காரம் | துலாம் | 3 |
| காயம் | ,, | 1 |
| அபினி | ,, | 1 |

அ 9

இவைகளைச் சாராயத்திலரைத்து மூன்றுதட்டி, டை உண்டைசெய்து எழுநாளைக்கு இரண்டுவேளை யும் கொடுக்க சௌஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

2. வலதுகாலைப் பூமியிலடிக்கடி யடித்துக்கொண்டும் இரண்டுபுறத்து அக்குளை யடிக்கடிபார்த்துக் கொண்டும் கொள் புல் தின்னாமலும் மெதுவாய் மூச்சுவிடுமாகில் குடல்பற்றிய ஜகர்பா வென்று பெயர்.

இந்த வியாதிக் கிருபதுநாள் கண்டம் வைக்கப் படும் உடனே பரிகாரஞ்செய்யவும்.

பக்குவம்

முதல் பிடரியி லகத்திய மிரத்தங்குத்திவாங்கி விரைவிற் பின்னாற்பேசும் பக்குவங்களைச் செய்ய வேண்டும் இல்லாவிட்டால் குதிரையைச் சேதப்படுத்தும்.

| | | |
|---|---|---|
| ஓமம் | சேர் | $\frac{1}{4}$ |
| காட்டுச்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| கடுகு | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலிமூலம் | ,, | $\frac{1}{4}$ |
| மிளகு | துலாம் | 8 |
| சுரூபித்தா | ,, | 8 |
| கழைக்கோட்டிக்காய்பருப்பு | ,, | 8 |

| | | |
|---|---|---|
| பொரித்தவெண்காரம் | துலாம் | 3 |
| சுழைக்கோட்டியிலை | பிடி | 3 |

இவைகளை மேற்படி யிலையோடரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவும்.

3. கழுத்துவீங்கி மூச்சடைப்பட்டு வாயினுலொருவித சத்தமுண்டாகி அதிக உபத்திரவத்தால் குதிரை கஸ்தியடையுமாகில் கழுத்தைப்பற்றிய ஜகர்பாதென்றும், பகுமாவென்றும் பெயர். இந்த வியாதி குதிரையை மூன்றுசாமத்திற்கொல்லும், அதற்குமேலிருக்குமாகில் அச்சமில்லை, ஆயினும்பரிகாரம்விரைவிற்செய்யவேண்டும். இது மேற்சொன்ன இரண்டு வியாதியிலுங் கடினமானதா லிதிலனேகமிறந்துபோகும் சிலது சொஸ்தமாகும்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | $\frac{1}{4}$ |
| அப்பளாகாரம் | ,, | $\frac{1}{4}$ |
| சவுக்காரம் | ,, | $\frac{1}{4}$ |
| மைசாட்சி | , | $\frac{1}{4}$ |
| பொரித்தபடிகாரம் | துலாம் | 5 |
| பொரித்தவெண்காரம் | ,, | 5 |
| யாளிவிரை | ,, | $2\frac{1}{4}$ |
| அபினி | ,, | $2\frac{1}{4}$ |
| பனைவெல்லம் | பலம் | 6 |
| எருக்கிலை | ,, | 5 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து முதலுள் ஒரு உண்டையை வெந்நீரிற் கரைத்துக் கொடுக்கவேண்டும் குதிரைக்கு ஆயுசிருக்குமாகில் அவிழ்தம் வயிற்றுக்குட் செல்லும்.

## வீக்கம்

1. கால்கள் வீங்கி கண்கள் மஞ்சளித்து கொள்ளின்பேரிலும் புல்லின்பேரிலு மதிக பிரியமில்லாமலிருக்குமாகில், கடுவாவென்றுபெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | ¼ |
| காட்டுச்சீரகம் | ,, | ¼ |
| வெட்பாலையரிசி | ,, | ¼ |
| கழைக்கோட்டிக்காய்பருப்பு | ,, | ¼ |
| கடுகுரோகணி | ,, | ¼ |
| பூவரசங்கொட்டை | ,, | ¼ |
| கடுகு | ,, | ¼ |
| பேய்ச்சுரக்காய் | ,, | ¼ |
| பேய்ப்பீர்க்கங்காய் | ,, | ¼ |
| கறியுப்பு | ,, | ¼ |
| கழைக்கோட்டியிலை | பிடி | 11 |

இவைகளை யொன்றாய்ச் சேர்த்தரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

2. அடிவயிற்றிலு மண்டத்திலும் நாலு கால்களிலும் சொற்பமாய் வீக்கங்கண்டு வாய் மஞ்சளித்து கொள்ளும் புல்லுங் கொஞ்சமாகத் தின்னுமாகில் கருவா என்றுபெயர்.

பக்குவம்

முதல் இரத்தம்குத்தி வாங்கி பின்பு

| | | |
|---|---|---|
| மைசாட்சி | துலாம் | 12 |
| சேராங்கொட்டை | ,, | 12 |
| பறங்கிப்பட்டை | ,, | 12 |
| பேய்க்கும்மட்டிக்காய் | ,, | 12 |

இவைகளை சாராயத்திலரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து 7-நாளைக்கு இரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி வெந்நீர்கொடுத்து நிதஞ்சாயத்திரம் குதிரையை உலாத்திக் கட்டவேண்டும்.

3. அடிவயிற்றில் அதிக வீக்கங்கண்டு நீர் சிவந்த மஞ்சள் நிறமாயிறங்கி கொள் புல் தின்னுமலும இரவுபகல் அதிக சோம்பலாயிருக்குமாகில் தகாரா என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | பலம் | 6 |
| ஓமம் | ,, | 6 |
| கடுகு | ,, | 6 |
| வசம்பு | ,, | 6 |
| காட்டுச்சீரகம் | ,, | 6 |

| | | |
|---|---|---|
| மிளகாய் | பலம் | 3 |
| புகையிலை | ,, | 3 |
| இந்துப்பு | ,, | 3 |
| முருங்கப்பட்டை | ,, | 3 |
| தபசுமுருங்கையிலை | துலாம் | 8 |
| கத்திரிவேர்ப்பட்டை | ,, | 8 |
| காட்டுவாழைப்பட்டை | ,, | 8 |
| விடத்தேரின்பட்டை | ,, | 8 |
| பூவரசன்பட்டை | ,, | 8 |
| அழிஞ்சிப்பட்டை | ,, | 8 |
| எருக்கன்பட்டை | ,, | 8 |
| சித்திரமூலத்தின்மேற்பாளை | ,, | 8 |
| வெள்ளெருக்கிலை | பலம் | 3 |
| ஆடுதின்னாப்பாளை | ,, | 3 |
| மலைவேம்பு | ,, | 3 |
| மூக்கிலிலை | ,, | 3 |

இவைகளையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து வேளை.க்கு பத்துதுட்டிடை மருந்தெடுத்து ஆட்டுப்பித்தி லுண்டைசெய்து இரண்டு வேளையுங் கொடுக்கச் சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கி காய்ந்த புல்லுடன் வெந்நீர் அருவேளை காட்டவேண்டும்.

## தலைநோய்

1. மூக்கில்நீரோடி யடிக்கடி உட்கார்ந்துக்கொண்டு மூச்செரிந்து முதுகுபாரிசங் கொஞ்ச மிழுப்

பாய் கொள தின்னமலும், புல்லின்பேரிலதிகப் பிரி யமில்லாமலும் சோம்பலாயிருக்குமாகில் வாதசீதன மென்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | துலாம் | 4 |
| கோஷ்டம் | ,, | 4 |
| கடுகுரோகணி | ,, | 4 |
| மைசாட்சி | ,, | 4 |
| வாய்விளங்கம் | ,, | 3 |
| யாளிவிரை | ,, | 2 |
| வெண்காரம் | ,, | 1 |
| படிகாரம் | ,, | 1 |
| காயம் | ,, | 1 |

இவைகளை முருங்கப்பட்டை சாற்றிலரைத்து மூன்றுதட்டிடை உண்டைசெய்து மூன்று நாளை க்கு இரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

2. மூக்கினால் நீர்மிகுந்த யிளகலாய் தண்ணீர் போலோடிவந்து யடிக்கடி இருமிக்கொண்டு கொள் தின்னமல் புல்லின்பேரி லதிக பிரியமாயிருந்து குதிரை யதிகசோம்பலாய் மூக்கினால் நீரோடுகிற தினா லதிக கஸ்தியடையும் இந்த வியாதியானது குதிரை பலவிடங்களில் தண்ணீர்குடிப்பதினா லுண் டாகின்றது.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகுரோகணி | துலாம் | 3 |
| திப்பிலிமூலம் | ,, | 3 |
| காட்டுச்சீரகம் | ,, | 3 |
| மிளகு | ,, | 3 |
| பூவரசங்கொட்டை | ,, | 3 |
| திப்பிலி | ,, | 3 |
| பூண்டு | ,, | 6 |
| வேளையிலை | பிடி | 3 |

இவையெல்லா மொன்றாயரைத்து தேனிற்கலந்து மூன்று துட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளை யுங்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

3 மூக்கில் சளியுரைத்து கெட்டியாய் வெளுத் தோடிவந்து மூக்கி லதிக துற்கந்தமுண்டாய் கொள் பரிச்சேதந் தின்னுமலிருக்குமாகில், சேம்பா என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 4 |
| வங்காளமஞ்சள் | ,, | 4 |
| ஓமத்தின்மேலுமி | ,, | 4 |
| கோஷ்டம் | ,, | 4 |
| திப்பிலிமூலம் | ,, | 4 |
| பொரித்தபடிகாரம் | ,, | 1 |
| பொரித்தவெண்காரம் | ,, | 1 |
| பூண்டு | ,, | 8 |
| நொச்சியிலை | பிடி | 3 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்து தேன்விட்டுப் பிசைந்து மூன்றுதோலா பிடிதட்டிடை உண்டை செய்து இரண்டுவேளையுங்கொடுக்கசொஸ்தமாகும்.

4 மூக்கினால் நீர்கெட்டியாயு மஞ்சளாயுந் துர்கந்தமாயு மோடிவந்து அதினால் குதிரையின் தேகமெல்லாம் அசங்கியமாயு மிருக்குமாகில் சங்காடா என்றுபெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 4 |
| ஓமம் | ,, | 4 |
| கடுகு | ,, | 4 |
| பூவரசங்கொட்டை | ,, | 4 |
| ஸ்ரீமிளகு | ,, | 4 |
| வசம்பு | ,, | 4 |
| கழைக்கோட்டிக்காய்பருப்பு | ,, | 4 |
| வெட்பாலையரிசி | ,, | 2 |
| மைசாட்டி | ,, | 2 |
| பரங்கி | ,, | 2 |
| கோஷ்டம் | ,, | 2 |
| திப்பிலிமூலம் | ,, | 2 |
| கடுகுரோகணி | ,, | 2 |
| றுபார்பு | ,, | 2 |
| பொரித்தவெண்காரம் | ,, | 2 |
| காயம் | ,, | 1 |
| பூண்டு | சேர் காலே அரிக்கா | |
| கழனிவெளிநண்டு | ,, | 60 |

இவையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்தரைத்து எலு மிச்சங்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து இரண்டு வேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளோநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

5. மூக்கில் நீரதிக குழம்பாயும் சிவப்பாயும் துர்க்கந்தமாயும் வெளிப்பட்டு அதினால் குதிரை மிகவு மிளைத்து கொள் புல் முதலியவைகள் பேரில் பிரியமில்லாமலிருக்குமாகில் களிர் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வேப்பங்கொழுந்து | சேர் | ¼ |
| கடுகுரோகணி | ,, | ¼ |
| கறிமஞ்சள் | ,, | ¼ |
| கடுக்காய்ப்பூ | ,, | ¼ |
| ஓமம் | துலாம் | 3 |
| பார்ப்பாரமுள்ளிவிரை | ,, | 3 |
| பூண்டு | ,, | 6 |

இவைகளுக்கெல்லாஞ் சரியிடையாய் பச்சைவெற்றிலை சேர்த்தொன்றாயரைத்து கொட்டைப்பாக்குப்பிரமாணம் உண்டைசெய்து இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளோநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்

## விரைவாதம்

1. குதிரைக்கு சூடுகொண்டு அதிகப்படுமாகில் விரைகள் மினுமினுப்பாய்யிருக்கும்.

பக்குவம்

துளசிச்சாறு
கரிசிலாங்கண்ணிச்சாறு

இவைகளைச் சுண்ணாம்புச்சேர்த்து மத்தித்து மேலே தடவ சொஸ்தமாகும் பத்தியமில்லை.

2. குதிரைக்கு குளிர்ச்சியினால் விரையில் சொறிபடர்ந்திருக்கும் உடனே கவனிக்கவேண்டும்.

பக்குவம்

மஞ்சள்
பெருங்காயம்

கலந்தரைத்துத் தடவ சொஸ்தமாகும்.

3. குதிரையி னண்டம்வீங்கி யுபத்திரப்படுமாகில் செய்யவேண்டியது.

பக்குவம்

| | | |
|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 9 |
| பார்ப்பாரமுள்ளி | ,, | 9 |
| ஆமணக்கின்வேர்ப்பட்டை | ,, | 9 |
| முருங்கப்பட்டை | ,, | 9 |
| நிலவிளாம்பட்டை | ,, | 9 |
| அத்திப்பட்டை | ,, | 9 |
| மிளகு | ,, | 9 |
| வசம்பு | ,, | 9 |
| நெய் | சேர் | 1 |

இவைகளைச் சேர்ந்திடித்து குதிரைக்குக் கொடுத்து பின்பு நெய் நல்லெண்ணை இவைகளால் குதிரையின் பீசத்திற்றேய்த்து பின்பு அழிஞ்சிலையை வேகித்து பீஜத்திலொத்திட்டுமேலேவைத்துக்கட்ட பதிமூன்றுவித வாய்வுஞ் சொஸ்தமாகும்.

4. சுபாவமாய் குதிரையண்டம் வீங்கி யிருந்தால்,

பக்குவம்

காவிக்கல்லை சீர்மைகாடியிலரைத்து அண்டத்தின்மேற்பூச வீக்கம்வாங்கி சொஸ்தமாகும்.

## சகலவிதகாயத்தின்மேற்பூசுஞ்சேர்வை

பக்குவம்

| | | |
|---|---|---|
| குங்கிலியம் | துட்டிடை | 1 |
| கத்தக்காம்பு | விராகனிடை | 2 |
| செந்தூரம் | ,, | 2 |
| நாளிக்காத சுற்சுண்ணாம்பு | ,, | 2 |
| நல்லெண்ணை | படி | $\frac{1}{4}$ |

இவையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த் தரைத்துக்கொண்டு சகல காயங்களிலுஞ் சிறங்குகளிலும் பூசிவர சொஸ்தமாகும் கொள்ளுகட்டும்போது வேளைக்கு $\frac{1}{4}$-படி பச்சைப்பயறு வேகித்து கூடகலந்து கட்டவும்.

௫. குதிரைக்கு அண்டத்திலாகிலும் கோசத்திலாகிலும் புண்ணாகி நீர்விடுகிறபோது அந்தப் புண்ணிலே நீரிறக்கினால்.

பக்குவம்

மிளகு சேர் ஒன்றரையே அரிக்கா

இதை ஏழுதரமரைத்து ஏழுதரம் வஸ்திரகாயஞ் செய்துக்கொண்டு இரண்டெலுமிச்சம்பழம் கொண்டுவந்து ஒருபழத்தைப்பிரண்டாயறுத்து அந்தப்புண்ணிலே தேய்த்து மற்றொருபழத்தின் சாற்றிலேகொஞ்சமிளகு பொடிசேர்த்துக் குழப்பித்தடவவும் இந்தப்படி ஒருநாளைக்கு மூன்றுதரம் விழுக்காடு எட்டு நாளைக்குத் தடவினால் சொஸ்தமாகும்.

6. குதிரைக்கு நீரடைப்புகண்டால் கைகண்ட

பக்குவம்

கால்சேர் நெய்யில் நாலுதுட்டிடை மிளகை நறுக்கிப்போட்டு காச்சி குதிரையின் நாசியிற்றடவ நீர்விடும் சொஸ்தமாகும்.

7. குதிரையி னண்டத்திற் குடலிறங்குமாகில்

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | துட்டிடை | 1 |
| கோதுமைமொய் | ,, | 2 |

இவையிரண்டையுஞ் சேர்த்தரைத்து குதிரைக்கு நிதம் அர்தாவாவுடன் சேர்த்துக்கொடுக்க சொஸ்தமாகும்.

8. குதிரைக்கு மூத்திர நோய்க்கு,

பக்குவம்

முருக்குகள்ளி

உப்பு

இவையிரண்டையும் நேகவரைத்து கோசமண்டையிரண்டின்மேலு மூன்றுவிசைத்தடவி, குளிர்ந்தஜலத்தில் குளுப்பாட்டவும் குணமாகும்.

## குதிரைக்கு விரையடிக்கும் விபரம்

விரையடிக்கும் மூன்றுநாளைக்குமுன்னேகொள் கொடாமல்நிறுத்திவைக்கவேண்டும். பின்புஇரண்டு கடடு வைக்கோலும் இரண்டுதுலாம் மஞ்சட்பொடியில் எட்டுதுலாம் வெண்ணெபோட்டு நன்றாய்க் கலந்து தயார்செய்துவைக்கவேண்டும் பின்புகாலுகால் களையும் நன்றாய்க்கட்டி பூமியில் மல்லாத்திப்படுக்க வைத்து குதிரை யசையாமலிருக்கும்படி இரண்டு பக்கத்திலு மேற்சொல்லிய வைக்கோற்கட்டையண்டைகொடுத்து பலப்படுத்தி பின்பு ஒரு பலமான கயிற்றினால் பீஜத்தடியிற் சுருக்கி யிழுத்துக்கட்டி பீசங்கள்தொங்கும்படியாய்ச்செய்து மேற்சொன்ன மஞ்சள்கலந்த வெண்ணெயை பீசத்தின்மேற்பூசி இரண்டு காழிகைவரையில் நன்றாய்ப்பிசைந்து குளுகுளத்துப்போனதின் பின்பு ஒரு சீலையால் நன்றாய் யிருகக்கட்டி சுருக்கையும் கைகால்களையும் அவிழ்த்துவிட்டுக் குதிரையை நிறுத்தி பீசத்தின்பேரிற் றண்ணீரடிக்கவேண்டும். குதிரை நீர்விட்டுதானால் குதிரையைக்கொண்டுபோய் லாயத்திற்கட்டி மறுநாள் காலையில் பீசத்திற்கட்டியிருக்குஞ்சீலையை யவிழ்த்துப்போட்டு இருபதுநாள்வரையில் கொள்கொடாமல் வெந்நீர்மாத்திரம்ஒருவேளை கொடுக்கவேண்டும். அல்லாமலும் விரையடித்தகாலந்து நாளைக்குள் பீசம் வீங்கிப்போகும் அதிலுள்ள கல்மிஷமெல்லாம்

நன்றாய் வெளிப்படும்பொருட்டு பிசத்தைக்கோணி யூசியினால் நன்றாய்க் சுத்திசெய்து வெளிப்படுத்திய பின்பு பின்னாற் சொல்லும் எண்ணையைப் பூசிவர வேண்டும்.

அதாவது

| | | |
|---|---|---|
| திக்குமாலி | துலாம் | 4 |
| கற்பூரம் | ,, | 4 |
| காப்பிரிக்கடுக்காய் | ,, | 3 |
| முருதாரசிங்கு | ,, | ஒன்னரை |
| கத்தக்காம்பு | ,, | ஒன்னரை |
| வேப்பெண்ணை | சேர் | 1 |
| நல்லெண்ணை | ,, | 1 |

இவைகளில் மேற்சொன்ன சரக்குகளைப் பொடி செய்து எண்ணையிற்கலந்துவைத்துக்கொண்டுபின்பு

| | | |
|---|---|---|
| புளியிலை | பிடி | 2 |
| நொத்தியிலை | ,, | 2 |
| வேப்பிலை | ,, | 2 |

இவைகளை கொதிக்கவைத்து பிசத்தின்மேலூற்றிட்டு மேற்சொன்ன எண்ணையை கோழி யிறகி னால் பூசிவரவேண்டும். அல்லாமலும் ஈக்கள் பிசத்தின்மேல் மொய்க்காமலும் காப்பாற்றி வரவேண்டும். பின்பு,

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | சேர் | 1 |
| கடுகுரோகணி | ,, | 1 |
| காட்டுச்சீரகம் | ,, | ½ |
| கடுகு | ,, | ½ |

| | | |
|---|---|---|
| ஓமம் | சேர் | ½ |
| இந்துப்பு | ,, | ½ |
| அபினி | துலாம் | 3 |

இவைகளை நையாந்தகரைச் சாற்றிலரைத்துயிர ண்டுதுட்டிடை உண்டைசெய்து நாற்பதுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

## சொரி சிறங்கு

1. அதிக சூட்டினால் தேகமெல்லாம் வட்டை. வட்டையாய் சிறங்குண்டானால்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 3 |
| வங்காளமஞ்சள் | ,, | 3 |
| சீரகம் | ,, | 3 |
| ஓமம் | ,, | 3 |
| ஏலம் | ,, | 3 |
| சல்லாதுவிரை | ,, | 3 |
| பெருஞ்சீரகம் | ,, | 3 |
| வெடியுப்பு | ,, | 8 |
| ஸ்ரீலேபன்புஷ | ,, | 3 |

இவைகளைத் தேனிலரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து உள்ளுக்கு கொடுக்கவேண்டும்.

பத்தியம்

கொள்ளுக்குப்பதிலாய் வேளை ஒன்றுக்கு 3-சேர் பச்சரிசி சாதத்தோடு பசுவின் தயிர் சேர்-¼, வெங்காயம் சேர்-¼ சேர்த்துக் கொடுக்கவேண்டும்.

அல்லாமலும்

நந்தியாவர்த்தனிலை
எருக்கிலை
வாழையிலை

இம்மூன்றையும் நன்றாய்க் காயவைத்து சுட்டு சாம்பலாக்கி வேப்பெண்ணெயிற் கலந்து சிறங்கு மேற் பூச காய்ந்து சொஸ்தமாகும்.

2. கழுத்து மயிரிலாவது வாயிலாவது வயிற்றி லாவது கால்களிலாவது தேகமுழுதிலுமாவது சிற ங்கு அல்லது வட்டைவட்டையா யுண்டாயிருந்து அதினுலிரத்தமோடிக்கொண்டு துன்பப்படுமாகில் அகின்பா லென்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| பெருஞ்சீரகம் | துலாம் | 2 |
| மிளகு | ,, | 2 |
| கொத்தமல்லி | ,, | 2 |
| அதிமதுரம் | ,, | 2 |
| நெல்லிமுள்ளி | ,, | 2 |
| வெந்தியம் | ,, | 2 |
| பொட்டலுப்பு | ,, | 2 |

இவைகளை வெங்காயச்சாற்றி லரைத்து மூன்று நாளைக்கு உள்ளுக்குக் கொடுக்கவேண்டும்.

அல்லாமலும்

| | | |
|---|---|---|
| வேப்பெண்ணெ | சேர் | 1 |
| சேராங்கொட்டை | துலாம் | 1 |

| | | |
|---|---|---|
| வங்காளக்கடுக்காய் | துலாம் | 1 |
| திக்குமாலை | ,, | 1 |
| முருதார்சிங்கு | ,, | அரை |
| கற்பூரம் | ,, | 1 |
| வாழைச்சருகு சுட்டசாம்பல் | ,, | 1 |
| நந்தியாவர்த்தஞ்சருகு சுட்டசாம் | | 1 |

இவைபெல்லாம் எண்ணையிற்சேர்த்துக் காய்ச்சி திறமூன்று துலாம் எண்ணை தேகத்திற் சிரங்கின் மேற்பூச சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளுநீக்கி நிதங்காலையில் ஒருசேர் சாதத்தில் எட்டுதுலாம் நெய் சேர்த்துக்கொடுத்து வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

3. குதிரையின் தேகமெல்லாம் மரிக்கிறதினால் தேய்த்துக்கொள்ளும் அப்பாலத்தினவென்றுபெயர்

பக்குவம்

கோவைச்சாறு
உப்பு

இவ்விரண்டுஞ் சமனாய் புடம்வைத்துத் தேகமெல்லாம்பூசி நன்று யுலர்ந்தபின் தண்ணீர்விட்டுக் குளிப்பாட்ட சொஸ்தமாகும்.

ஆடா

அதாவது குதிரையின் கால்களில் கட்டிபைப் போதுண்டாகும் அதினால் குதிரைநொண்டும். இக் திரண்டுவிதமுண்டு அக்தில்.

1. கால்களிற் கட்டியைப்போல் தோன்றி குதிரை நடக்காமல் நொண்டுமாகில்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| பேய்க்கும்மட்டிவேர் | துலாம் | 2 |
| வெள்ளைச்சாட்டாணைவேர் | ,, | 2 |
| பார்ப்பாரமுள்ளிவேர் | ,, | 2 |
| வெள்ளறுகின்வேர் | ,, | 2 |
| பேய்ச்சுரக்காய் | ,, | 3 |
| ஓமம் | ,, | 6 |
| கடுகு | ,, | 6 |
| காட்டுச்சீரகம் | ,, | 6 |
| மிளகு | ,, | 6 |
| வசம்பு | ,, | 6 |
| புகையிலை | ,, | 6 |
| கழைக்கோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 3 |
| சரூபித்தா | ,, | 3 |
| பூண்டு | ,, | 6 |
| தயிர் | சேர் | அரை |

இவைகளை தயிரில்சேர்த்தரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து குதிரைக்கு கொடுக்கவேண்டும். அல்லாமலும் கட்டிகளின்பேரில் பதிநேரு சூடுபோடவேண்டும். அல்லது இந்த செயநீரைச் செய்து கட்டியின்மேற்பூச கட்டிகரைந்துபோகும்.

அதாவது

| | | |
|---|---|---|
| சற்சுண்ணும்பு | விராகனிடை | 1 |
| வைக்கோற்சுட்டசாம்பல் | ,, | 1 |

| | |
|---|---|
| பாஷாணம் குண்டுமணியிடை | 1 |

இம்மூன்றையும் எருக்கன்பாலிலரைத்து கட்டி பின்மேற்பூசிசீலையால்கட்ட கட்டிவெந்து புண்ணுகி கரைந்துபோம். பின்பு,

| | | |
|---|---|---|
| வெள்ளைக்குங்கிலியம் | துலாம் | 1 |
| திக்குமாலி | ,, | 1 |
| முறுதார்சிங்கு | ,, | 1 |
| மெழுகு | ,, | 1 |
| சாரபூரம் | ,, | 1 |
| வேப்பெண்ணை | ,, | 6 |

இவையெல்லாம் எண்ணையிற்சேர்த்துக் கொதிக்கவைத்து தண்ணீரிற் சாய்க்கவேண்டும். பின்பு தண்ணீரிலிருந்தெடுத்து நிதஞ் சிறங்கின்மேற் பூச சௌஸ்தமாகும் பத்தியமில்லை.

2. இடதுகாலின் துடையருகே வீக்கங்கண்டு அதன் உபத்திரவத்தால் குதிரை நொண்டுமாகில்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 6 |
| மைசாட்சி | ,, | 6 |
| சாதிக்காய் | ,, | 6 |
| சவுக்காரம் | ,, | 6 |
| ஆனிகிரை | ,, | 3 |
| பொரித்தபடிகாரம் | ,, | 3 |
| பொரித்தவெண்காரம் | ,, | 3 |

| | | |
|---|---|---|
| அபினி | துலாம் ஒன்னரை | |
| எருக்கிலை | ,, | 5 |

இவைகளைச் சிறுபிள்ளைகள் சிறுநீரிலரைத்துஇர ண்டு துட்டிடை உண்டைசெய்து எழுநாளைக்குக் கொடுக்கவேண்டும்.

அல்லாமலும்

| | | |
|---|---|---|
| கரியபோளம் | துலாம் | 2 |
| மஞ்சள் | ,, | 2 |
| அதிமதுரம் | ,, | 2 |
| ஆளிவிரை | ,, | 2 |
| கற்பூரம் | ,, | 1 |

இவைகளை கள்ளிச்சாற்றிலரைத்து அதோடுகொ ஞ்சங் களிமண்ணும் வெள்ளாட்டின் புழுக்கையும் சேர்த்துக் கொதிக்கவைத்து எழுநாளைக்கு வீக்கத் தின்மேற்பூச சொஸ்தமாகும்

## பாதே கைசர்

குதிரையின் கண்கள் கீழுமேலுமாய்த் தோன் றித் தேகத்தின் மயிர்களெல்லாஞ் சிலிர்த்துக்கொ ண்டு குதிரை அடிக்கடி மருண்டு மருண்டு கட்டுத் தறியிற் அதிக வேசாரமாயிருந்து கொள்ளும் புல் லுந் தின்னுமல் அடிக்கடி கீழே யுட்கார்ந்துப் போ குமானல் பாதேகைசர் என்னும் சாந்தினி என்றும் பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| காடைக்கண்ணிமாவு | சேர் | 3 |
| மிளகு | ,, | 3 |

| | | |
|---|---|---|
| தெரிப்புள்ளபூண்டு | சேர் | 1 |
| வாய்விளங்கம் | ,, | $\frac{1}{4}$ |
| காட்டுச்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| வசம்பு | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலிமூலம் | ,, | $\frac{1}{4}$ |
| மஞ்சள் | ,, | $\frac{1}{4}$ |
| இந்துப்பு | துலாம் | 8 |
| மைசாட்சி | ,, | 8 |
| கடுகுரோகணி | ,, | 8 |
| பூவரசங்கொட்டை | ,, | 6 |
| குருசானிஓமம் | ,, | 6 |
| கடுக்காய் | ,, | 6 |
| காயம் | ,, | 6 |
| அபினி | ,, | 2 |
| இஞ்சி | பலம் | 6 |
| சாராயம் | சேர் | 9 |
| கருங்கோழி | | 1 |

இவைகளில் முதல் கோழியையறுத்து அதின் வயிற்றி லிருக்குங் குடல் முதலியவைகளை நீக்கி அதோடு மற்ற சரக்குகளையுஞ் சாராயத்திலரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து நாற்பதுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

### பத்தியம்

முதலிருபத்தொருநாள்வரைக்கும் கொள்ளை நீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவேண்டும்.

## மோத்திரு

குதிரை முழங்காற்கணுவில் வீக்கங்கண்டு அதி னுபத்திரவத்தால் கொண்டுமாகில் மோத்திரு என் றுபெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கடுகு | துலாம் | 4 |
| கடுகுரோகணி | ,, | 4 |
| கோஷ்டம் | ,, | 4 |
| பொரித்தவெண்காரம் | ,, | 4 |
| காயம் | ,, | 2 |
| முருங்கப்பட்டை | சேர் | 8 |

இவைகளை யரைத்து ஒன்றரை துட்டிடை உண் டைசெய்து கொடுக்கவேண்டும் அல்லாமலும் வீக்க த்தின்மேலிருக்கு முரோமங்களை க்ஷவரஞ் செய்து ஏழுநாளைக்கு அட்டைவிட சொஸ்தமாகும் பத்திய மில்லை.

## மூசுவி

குதிரையினிடது கணைக்காற் குளைச்சியில் வீக் கங்கண்டு அதினால் குதிரை நொண்டுமாகில் மூசுவி என்று பெயர்.

இந்த வியாதிக்கு துவக்கத்திற்றானே அதிக விரைவாய் பக்குவஞ் செய்யவேண்டும். இல்லாவிட் டால் குதிரைக்கதிக தொந்திரவு கொடுத்துக் கொ ன்றுபோடும்.

## பக்குவம்

| | | |
|---|---|---|
| ஓமம் | துலாம் | 4 |
| காட்டுச்சீரகம் | ,, | 4 |
| கருஞ்சீரகம் | ,, | 4 |
| கரியபோளம் | ,, | 8 |
| சோரங்கொட்டை | ,, | 12 |
| பனைவெல்லம் | சேர் | 1 |
| பொரித்தவெண்காரம் | துலாம் | 3 |
| காயம் | ,, | 2 |

இவைகளையெல்லாம் சேர்த்தரைத்துமூன்று துட்டிடை உண்டை செய்து ஏழுநாளைக்குக் கொடுக்க வேண்டும். அல்லாமலும் வீக்கத்தின்மே லிருக்கு முரோமங்களை க்ஷவரஞ்செய்து பதினோட்டைவிட வேண்டும் இதில் சொஸ்தப்படாவிட்டால்மேற் சொல்லிய * செயநீரைச் செய்து வீக்கத்தின்மேற் பூசி சீலையாற் கட்டினால் வீக்கம்வெந்து ரிணமாகிச் சரிப்பட்டுபோகும் பின்பு மேற்சொன்ன பிளாஸ்திரி செய்து இரணத்திற்பூசி யாற்றிக்கொள்ளவேண்டும்.

## வேறு-பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | சேர் | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| பூண்டு | ,, | $\frac{1}{4}$ |
| சோரங்கொட்டை | ,, | $\frac{1}{4}$ |

---

* 114-வது பக்கத்தில் ஆடாவியாதியில் விபரங்கண்டிருக்கிறது.

| | |
|---|---|
| காட்டுச்சீரகம் | ,, அரிக்கால் |
| கடுகுரோகணி | ,, அரிக்கால் |
| கருஞ்சீரகம் | ,, அரிக்கால் |
| ஸ்ரீ-ஸ்ரீபதி | ,, அரிக்கால் |
| வசம்பு | ,, அரிக்கால் |
| ஆவாரம்விரை | ,, முக்கால் |
| ஊமத்தன்விரை | ,, முக்கால் |
| வெண்காரம் | துலாம் அரை |
| காயம் | விராகனிடை 1 |

இவைகளைச் சிறுநீரில் அல்லது சாராயத்தி லரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

## சக்கரேயவ்வல்

அதாவது குதிரைக் கணைக்காலிற் காணும் வீக்கத்துக்குப் பெயர். இத்திற பலவிதங்களுண்டு அவை யாவன.

1. கணைக்காலில் வீக்கங்கொண்டு அதினுல் குதிரை நொண்டுமாகில்,

### பக்குவம்

| | | |
|---|---|---|
| மிளகு | துலாம் | 8 |
| காட்டுச்சீரகம் | ,, | 8 |
| கடுகுரோகணி | ,, | 8 |
| கோஷ்டம் | ,, | 8 |
| வாய்விளங்கம் | ,, | 8 |
| சித்திரமூலம் | ,, | 8 |
| கருஞ்சீரகம் | ,, | 4 |

| | | |
|---|---|---|
| திப்பிலிமூலம் | ,, | 4 |
| வெட்பாலையரிசி | ,, | 4 |
| மைசாட்சி | ,, | 4 |
| கறிமஞ்சள் | ,, | 4 |
| கழைக்கோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 4 |
| அமுக்கிறுங்கிழங்கு | ,, | 4 |
| பொரித்தபடிகாரம் | ,, | 4 |
| பொரித்தவெண்காரம் | ,, | 4 |
| காயம | ,, | 1 |

இவைகளைச் சாராயத்திலரைத்து மூன்று தட்டிடைடஉண்டைசெய்து பத்துநாளைக்கு இரண்டு வேளையுங் கொடுக்கவேண்டும் அல்லாமலும் வீக்கத்தின்மேலிருக்கு மூரோமங்களை நன்றாய் க்ஷவரஞ் செய்து அதின்மேல்,

| | | |
|---|---|---|
| மைசாட்சி | துலாம் | 2 |
| சவுக்காரம் | ,, | 2 |
| சோரங்கொட்டை | ,, | 2 |
| என்னை | ,, | 2 |
| திருகுகள்ளிப்பால் | ,, | 8 |
| நீர்வாளப்பருப்பு | ,, | ½ |
| வெள்ளைப்பாஷாணம் குண்டுமணியிடை—1 | | |

இவைகளை மேற்சொன்ன பாலிலரைத்து மேற்சொன்ன என்னையிற்சேர்த்து நன்றுபரைத்து வீக்கத்தின்மேர் பூசி சிலையாற்கட்ட நாலைந்து நாளையில் வெர்த்து ரிணமாகி சிமேழாடி சரிப்பட்டுப்போகும் பின்பு மேலெழுதிய பிளாஸ்திரியைப்போட்டால் சொஸ்தமாகும்.

பத்தியம்

ஏழுநாளைக்கு கொள்ளைநீக்கி வெந்நீர் ஒரு வேளை காட்டவேண்டும்.

2. அக்குளினருகில் வீங்கியிருக்குமாகில் பகலி என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 11 |
| கடுகு | ,, | 11 |
| மிளகு | ,, | 11 |
| பூண்டு | சேர் | ¼ |
| அபினி | துலாம் | 1 |

இவைகளைத் தேனிலரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து கொடுத்து வீக்கத்தின்மேல் முன்சொன்ன பக்குவஞ்செய்ய சொஸ்தமாகும்.

3. முழங்காலுக்குமேல் வீக்கங்கண்டால் குருக்கி என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 6 |
| மிளகு | ,, | 6 |
| காட்டுச்சீரகம் | ,, | 6 |
| புகையிலை | ,, | 6 |
| சரூயித்தா | ,, | 3 |
| பொரித்தவெண்காரம் | ,, | 2 |
| காயம் | விராகனிடை | 1 |

இவைகளைக் கையாந்தகரைச்சாற்றிலரைத்து இரண்டு துட்டிடை வுண்டைசெய்து கொடுக்க வேண்டும்.

அல்லாமலும்,

| | | |
|---|---|---|
| புளியிலை | பிடி | 1 |
| வேப்பிலை | ,, | 1 |
| நுந்தியிலை | ,, | 1 |
| அழிஞ்சியிலை | ,, | 1 |
| பிரமிப்பூண்டு | ,, | 1 |

இவைகளை கொதிக்கவைத்து ஒத்திட சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைக் குறைத்துக்கட்டவும்.

4. முன்னங்கால்களிற் கழைக்கோட்டிக்காய்ப் பிரமாணம் உண்டைகட்டுமாகில் அட்டி என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | துலாம் | 4 |
| வசம்பு | ,, | 2 |
| சேராங்கொட்டை | ,, | 2 |
| வெண்காரம் | ,, | 1 |
| காயம் | ,, | ½ |

இவைகளை உத்தாமணிச்சாற்றி லரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து கொடுக்கவும். அல்லாமலும் கற்றாழைச்சோறெடுத்து அதோடு ஒரு துலாம் படிகாரம் சேர்த்து வீக்கத்தின்மேல் வைத்துக்கட்டவும் பின்பு மூன்றுநாள் தரித்துக் கட்டையவிழ்த்து மறுபடியும் புதிதாய்க்கட்டவும் இப்படி ஏழுகட்டுக்கட்ட சொஸ்தமாகும்.

5. முன்னங்காற் கணுவில் வீங்கினால் சக்கரே பவ்வலென்று பெயர்.

மேற்சொல்லிய சக்கரேபவ்வலுக்குச் சொன்ன பக்குவமே இதற்குஞ்செய்ய சொஸ்தமாகும்.

6. நான்கு கணைக்கால்களிலுங் கொப்பளங் கண்டிருக்குமாகில் முருகுபயிஜா என்று பெயர். அக் திரண்டுவகைப்படும் அவையில் முதலாவது தண்ணீரைப்பற்றியது. இரண்டாவது இரத்தத் தைப் பற்றியது.

இவைகளில் தண்ணீரைப்பற்றியதுக்கு யா தோர் பக்குவஞ் செய்யவேண்டியதில்லை.

இரத்தத்தைப் பற்றியதாயிருந்தால் அதிகஜாக் கிரதையாய் உடனே பக்குவஞ் செய்யவேண்டும்.

## மருந்து

| | | |
|---|---|---|
| வங்காளமஞ்சள் | துலாம் | 1 |
| மைசாட்சி | ,, | 1 |
| பொரித்தவெண்காரம் | ,, | 2 |
| காயம் | ,, | 1 |
| கடுகுரோகணி | ,, | 3 |
| மிளகு | ,, | 3 |
| சவுக்காரம் | ,, | 3 |
| கோஷ்டம் | ,, | 8 |

இவைகளைச் சாராயத்திலரைத்து இரண்டு துட்டிடை யுண்டைசெய்து இரண்டு வேளையுங் கொடுக்கவேண்டும். அல்லாமலுங் கொப்பளத்தின் மேலிருக்கு முரோமங்களை க்ஷவரஞ்செய்து அதின்

மேல் மிதமோரட்டை எழுநாளைக்குவிட சொஸ்த மாகும் பத்தியமில்லை.

## உஷார்

குதிரை சவாரிபோய் வந்தவுடனே திடீரென ஒருவித வயிற்றுவலியுண்டாகும் அத்தருணஞ் செய்யவேண்டியது.

பக்குவம்

| | |
|---|---|
| சுக்கு | பலம் 1 |
| மிளகு | ,, 1 |

இவையிரண்டையும் பொடி செய்து மூன்று பலம் நெய்யுடனே வெந்நீர்வார்த்து அப்பொடியைப் போட்டு குழப்பிக்கொடுக்க சொஸ்தமாகும்.

2. சாந்தி பெருங்குத்தாய் மூன்றுபிடி தும்பை யிலையும் செறங்காய் உப்புஞ் சேர்த்துவைத்து சேத மில்லாமல் உள்ளுக்கு மேய்க்கவும்.

3. சாந்தி

| | |
|---|---|
| மிளகு | சேர் $\frac{1}{4}$ |
| இஞ்சி | ,, அரிக்கால் |
| சுக்கு | ,, அரிக்கால் |
| புகையிலை | ,, அரிக்கால் |

இந்த நாலுவகையும் ஒருமிக்க சேர்த்திடித்து உள்ளுக்குக்கொடுக்க சொஸ்தமாகும்.

4. கைகண்டமுறை. கடுகுரோகணி பலம் முக்கால் பாதி வறுத்துக்கொண்டும் பச்சையா யெடுத்துக்கொண்டும்.

| | | |
|---|---|---|
| கருப்புட்டிவெல்லம் | பலம் | 2 |
| வெண்காரம் | விராகனிடை | 1 |

கொண்டுவந்து பொரித்துக்கொண்டு இவைகளை பொன்றாயிடித்து இரண்டுண்டை செய்து ஒரு உண்டையை உள்ளுக்குக் கொடுத்து நாலுநாழிகை பொறுத்தபின்பு மற்றொருண்டையை மேய்க்கவும் சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளை நீக்கிவைக்கவும்.

## சேம்பா

மூக்கிலிருந்து தண்ணீர் வடிந்தால் சேம்பா என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வெள்ளைப்பூண்டுதோல் | பலம் | $\frac{1}{4}$ |
| குளிமஞ்சள் | ,, | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| பெருங்காயம் | விராகனிடை | 11 |

இவைகளையரைத்து மிருதுவானகோணியிற்றடவி காயவைத்து திரிசெய்து நெருப்பிற் கொளுத்திக் கொள்ள புகைவரும் அந்தப்புகையை ஒருகுழாவழியாய் காலை இரண்டுவேளை மாலை மூன்றுவேளை மூக்கிற்கொடுக்க பெரும்பாலும் நீர்வெளிப்படும் மறுபடியுமுடனே அரைப்பலம் பெருங்காயங் கொண்டுவந்து கல்வத்திற்போட்டு நன்றாயரைத்து எடுத்துக் கொண்டு மூன்று பெரியஉருளைக்கிழங்கைத்தண்ணீர்

விட்டு வேகவைத்து தோலை உரித்து எறிந்துவிட்டு நன்றாய்ப்பிசைந்து மேற்படி அரைத்தபெருங்காயத்தைச்சேர்த்து பிசைந்து உண்டை செய்து உள்ளுக்குக் கொடுக்கவும் சொஸ்தமாகும் இப்படி யிடைவிடாமல் மூன்றுநாள் சாயந்திரம் கொடுத்து வரவும் சேம்பா நின்றுபோய்விடும்.

## குதிரைக்கு மார்பிடிப்புக்கு மருந்து

| | |
|---|---|
| வெல்லம் ரூபாயிடை | 25 |
| மிளகாய் துக்காணியிடை | 4 |
| கேழ்வரகுமாவு துக்காணியிடை | 8 |

மிளகாயை தூள்செய்துக் கொண்டு மேற்படி தூளை இரண்டு தினுசிலுங் கொஞ்சம்ஜலம்விட்டுப்பிசைந்து கொடுக்கவும் சொஸ்தமாகும் பத்தியமில்லை.

## குதிரைக்கு அடிக்கும் பலவித லேப்பு

1. மனிதர்மூத்திரம் புத்துமண் புளியிலை உப்பு இவைகளை ஒருமிடாவிற்போட்டுக் காச்சிக்கொண்டு சூடுபெற அடிக்கவும்.

### 2-வது முறை

| | |
|---|---|
| உழைமண் பட்டணம்படி | 1 |
| பச்சரிசி பட்டணப்படி | 1 |
| உப்பு பட்டணம்படி | 1 |

ஒரு மிடாவில் 6-படி ஜலம்விட்டு மேற்படி தினுசுகளைப்போட்டு நன்றாய்க்காச்சி யடிக்கவும்.

### 3-வது முறை

கேழ்வரகுமாவு
புத்துமண்

வேகித்தகொள்ளுத்தண்ணீர்
ஊட்டைத்தண்ணீர்
வெள்ளாட்டின்சாணி
வேப்பிலை
புளியிலை
வல்லாரியிலை
சேம்பையிலை
உப்பு
கரியபோளம்
மைதாலக்கடி

இவைகளை பெரியபானையிற்போட்டுக்காச்சி அடிக்கவும்.

4-வது முறை. சித்தாமணக்குக் கொட்டை பருப்பு படி ஒன்னரை 5-படி தயிரிற்போட்டுக் காச்சி சூடாய் அடிக்கவும். மேற்குறித்த லேப்புகளில் ஏதாவது ஒருலேப்பு அடித்த மறுநாள் குதிரையை உப்பந்தண்ணீரிற் கொண்டுபோய் நன்றாய் நீந்தவடித்துவீட்டுக்குகொண்டுவந்தவுடனே மூன்று திரு அருக்கு சாராயங் கொடுத்தபின் கொள்ளுகட்டவும்.

## பேல்

அதாவது குதிரைக்கால் நரம்புகள் கனத்துக்கொண்டு வீக்கமுண்டாகி பலவிதமான உண்டைகள் கட்டுவதற்குப் பெயர்.

1. குதிரையின் வலது முன்னங்கால் அல்லது இடது பின்னங்கால் பெருநரம்பானது வீங்கி இர

பட்டைசாராயம் வடித்ததண்ணீர்.

ண்டு மூன்று நாளைக்குள் மேற்படி நரம்பிற் கழைக் கோட்டிக்காய்ப் பிரமாணம் அல்லது மணிப்புன்னங் கொட்டைப்பிரமாணம் உண்டைகட்டுமானால் நர்பேனென்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | சேர் | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| சோங்கொட்டை | ,, | $\frac{1}{8}$ |
| பூண்டு | ,, | $\frac{1}{4}$ |
| பனைவெல்லம் | ,, | 1 |

இவையெல்லா மொன்றாய்ச்சேர்த்தரைத்து மூன்றுதுட்டிடை உண்டைசெய்து இரண்டு வேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

2. குதிரையி னிடதுபின்னங்கால்நரம்பு வீங்கி அதிற் புங்கங்கொட்டைப் பிரமாணம் உண்டை கட்டுமாகில் மாதர்பேலென்று பெயர்

பக்குவம்

| | | |
|---|---|---|
| எள்ளு | சேர் | $\frac{1}{4}$ |
| காட்டுச்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| பச்சைக்கடலை | ,, | $\frac{1}{4}$ |
| சேராங்கொட்டை | , | $\frac{1}{4}$ |

| | | |
|---|---|---|
| கச்சைசக்கருவாடு | ,, | ¼ |
| தேங்காய் | ,, | ¼ |
| பனைவெல்லம் | ,, | ¼ |
| தட்டைப்புங்கம்பட்டை | ,, | ¼ |
| வேப்பெண்ணை | ,, | ¼ |
| கெந்தகம் | துலாம் | 1 |

இவைகளில் முதல்கெந்தகத்தை இளநீரில்நன்ருயரைத்து மற்ற சரக்குகளோடு தேங்காய் வேப்பெண்ணை கெந்தகம்முதலியவைகளைச் சேர்த்தரைத்து இரண்டுதுட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்டவும்.

3. குதிரையின் தேகத்திற் கழைக்கோட்டிக்காய்ப் பிரமாணம் உண்டைகட்டுமானல் பூட்டுபேலென்று பெயர்.

பக்குவம்

முதலிரத்தங்குத்தி வாங்கி பின்பு.

| | | |
|---|---|---|
| சாதிலிங்கம் | துலாம் | 2 |
| வெள்ளைப்பாஷாணம் | ,, | 2 |
| தாமாசு | ,, | 2 |
| அப்பளாகாரம் | ,, | 4 |
| பேய்கும்மட்டிவேர் | ,, | 4 |
| மனிதர்மண்டையோடு | ,, | 4 |
| தாளகம் | ,, | ¼ |

இவைகளை இஞ்சிசாற்றில் பனிரெண்டு சாமமரை த்து கடலைப்பிரமாணம் உண்டைசெய்து இரண்டு வேளையுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

4 குதிரையின் மேற்றோலில் குண்டுமணிப்பிர மாணம் உண்டைகட்டுமானாற் சம்பர்பேலென்று பெயர்.

பக்குவம்

முதல் கழுத்துநரம்பி லிரத்தங்குத்தி வாங்கி பின்பு

| | | |
|---|---|---|
| எள்ளு | சேர் | 1 |
| சோளக்கொட்டை | ,, | 1 |
| பனைவெல்லம் | ,, | 1 |
| எருக்கிலை | ,, | 100 |

இவைகளையரைத்து இரண்டு துட்டிடை உண்டை செய்து ஏழுநாளைக்கு இரண்டுவேளையுங் கொடுக்கச் சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

5. குதிரையின் காலெலும்பில் நாரஞ்சிப்பழ ப்பிரமாணம் உண்டைகட்டுமானால் அட்டுபேலென் றுபெயர்.

பக்குவம்

முதலிரத்தங்குத்திவாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| கெந்தகம் | தலம் | 12 |
| நவாச்சாரம் | ,, | 1 |
| தாளகம் | ,, | 1 |
| லிங்கம் | ,, | 1 |
| சாஜிக்கார் | ,, | 1 |
| படிகாரம் | ,, | 1 |
| காவிக்கல் | ,, | 1 |
| வெண்காரம் | ,, | 1 |
| பூவரசங்கொட்டை | ,, | 1 |
| மெழுகு | ,, | 1 |

இவையெல்லா மரைத்து எலுமிச்சம்பழச் சாற்றில் குழப்பி கொதிக்கவைத்து தண்ணீருக்குள் வைத்து மெல்லிசாய்ப் பொடிசெய்து வைத்துக் கொண்டு நாளொன்றுக்கு மேற்படி பொடியில் இரண்டு விராகனிடை யெடுத்து நாலுதுட்டிடை கம்புமாவில் கலந்து இரண்டுண்டையாகச்செய்து காலையிலொன்று மாலையிலொன்றுமாகக் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

6 கண்களோரத்தில் கடலைப்பிரமாணம் உண்டை கட்டுமாகில் சஷம்பேலென்று பெயர்.

பக்குவம்

முதலிரத்தங்குத்திவாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| சோரங்கொட்டை | சேர் | ¼ |
| எள்ளு | ,, | ¼ |

| | | |
|---|---|---|
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| பூண்டு | ,, | $\frac{1}{2}$ |
| எருக்கிலை | ,, | $\frac{1}{4}$ |
| குண்டுமணிவேர் | துலாம் | 3 |
| கோவைவேர் | ,, | 3 |
| தட்டைப்புங்கன்வேர் | ,, | 3 |
| பேய்க்கும்மட்டிவேர் | ,, | 3 |
| பனைவெல்லம் | சேர் | $\frac{1}{2}$ |

இவையெல்லாமொன்றாய்ச் சேர்த்தரைத்து இரண்டுதுட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளை யுங் கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளைநீக்கி வெந்நீர் ஒருவேளை சாட்ட வேண்டும்.

7. குதிரையின் வலது முன்னங்காலிலாவது இடது பின்னங்காலிலாவது முழங்காலுக்குக் கீழே தழும்புகளுண்டாய் நாளுகளுக்கு ளதிகப்படுமாகில் அத்துபேலென்று பெயர்.

பக்குவம்

முதலிரத்தங்குத்திவாங்கி பின்பு,

| | | |
|---|---|---|
| பச்சரிசி | சேர் | $\frac{1}{4}$ |
| சோளக்கொட்டை | ,, | $\frac{1}{4}$ |
| வெண்காரம் | ,, | $\frac{1}{4}$ |

கொண்டுவந்து இரவும் பகலுந் தண்ணீரிலூற வைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து இரண்டு வேளையுங்கொடுக்க சொஸ்தமாகும்.

பத்தியம்

கொள்ளுநீக்கி வெந்நீர் ஒருவேளை காட்ட வேண்டும்.

## முதுகுபுண்

குதிரையின் முதுகுவீங்கி உபத்திரவப்படுமாகில்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| புளியிலை | பிடி | 1 |
| வேப்பிலை | ,, | 1 |
| நொச்சியிலை | ,, | 1 |
| உத்தாமணியிலை | ,, | 1 |
| தூத்தியிலை | ,, | 1 |

இவைகளை கொதிக்கவைத்து வீக்கத்தின்மே லொத்திடவேண்டும் இதிற் சொஸ்தப்படாவிட்டால் வீக்கத்தின்மேற் கொஞ்சங்கீறிவிட்டு மயில் துத்தம் பொடிசெய்து அதின்மேல் மூன்றுநாளைக் குத்தூவ வீக்கம் புண்ணாகி இரத்தமுஞ் சீழும்வடியும் அதிலுள்ள கலுஷமெல்லாம் நன்றாய் வடிந்த பின்பு வெந்நீராற் செவ்வையாய்க் கழுவிப்போட்டு முன்சொன்ன * பிளாஸ்திரிவைப்போட சொஸ்தமாகும்.

## பம்மணி

அதாவது-குதிரையின் அயால்ரோமங்களிலாவது, வாலிலாவது, கறைக்கோட்டிக்காய்ப் பிரமாணம் உண்டைகட்டிக்கொண்டு அதினால் தகிரண்டிடங்களிலுமிராநின்ற உரோமங்களுதிர்ந்துபோனால்.

* 104-வது பக்கம் 2-வது பக்குவத்தில் கண்டுகொள்க.

### பக்குவம்

| | | |
|---|---|---|
| பறங்கிப்பட்டை | சேர் | ½ |
| கெந்தகம் | துலாம் | 8 |
| சுருமா | ,, | 2 |
| இரசம் | ,, | 2 |
| மயில்துத்தம் | ,, | ½ |
| சோனமாவு | ,, | 8 |
| முருங்கப்பட்டை | ,, | 8 |
| தேன் | ,, | 4 |

இவைகளை தேனுட்பட பிள்ளைகள் சிறுநீரி லரைத்து இரண்டு துட்டிடை உண்டைசெய்து கொடுக்கவேண்டும். இதில் சொஸ்தப்படாவிட்டால்,

| | | |
|---|---|---|
| அழிஞ்சில்வேர் | சேர் | 2 |
| சேரான்கொட்டை | ,, | 1 |
| மாவஞ்சிபான | ,, | ½ |

இவைகளை பொன்றிரண்டாயிடித்து குழித் தயில மிறக்கிப்பூச சொஸ்தமாகும்.

### பல முறைகள்

குதிரைக் கண்ணின்கீழேயாவது காற்குளர்ச்சி யின் மேலேயாவது குன்டுமணிப் பிரமாணம் உண் டைகட்டித் தினவுண்டாகி நாளுக்குநாள் மேற்படி உண்டையானது பருத்து வளருமாகில் பாசாத்து என்று பெயர். இந்த வியாதி குதிரைகளுக்கதிக மாய் மாரிகாலங்களிலுண்டாகும்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| காட்டுச்சீரகம் | சேர் | 1 |
| மிளகு | ,, | ½ |
| அரக்கு | ,, | 1 |
| பூண்டு | ,, | ¼ |
| வல்லாரையிலை | பிடி | 1 |
| பஞ்சியிலை | ,, | 1 |

இவைகளைச் சிறுபிள்ளைகள் சிறுநீரில் ஒரு நாள் ஊரவைத்து அரைத்து மூன்றுதுட்டிடை உடைசெய்து கொடுக்கவேண்டும்.

அல்லாமலும்

| | | |
|---|---|---|
| ஆட்டின்கொழுப்பு | தலாம் | 8 |
| கற்கண்டு | | |
| கஸ்தூரி | | |
| மூறுதார்சிங்கு | | |
| மயில்துத்தம் | | |

இவைகளை மேற்சொன்ன கொழுப்பைச்சேர்த்து உருக்கிவைத்துக்கொண்டு வியாதியின்மேற்பூச சொஸ்தமாகும்.

குதிரை யக்குளில் மார்புக்கு அடுத்தாப்போல் கொட்டைப்பாக்குப் பிரமாணம் உண்டைகட்டி நாளுக்குநாள் அதிகப்படுமாகில் கேட்டாகமம் என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| வாளுலுவையரிசி | தலாம் | 11 |
| கரியபோளம் | ,, | 11 |
| கறிமஞ்சள் | ,, | 11 |

| | | |
|---|---|---|
| கோஷ்டம் | ,, | 11 |
| ஆனிவிரை | ,, | 11 |
| அமுக்கிறாக்கிழங்கு | ,, | 9 |
| அக்கிறாகாரம் | ,, | 9 |
| திப்பிலிமூலம் | ,, | 9 |
| திப்பிலி | ,, | 7 |
| பூவரசங்கொட்டை | ,, | 7 |
| பொரித்தவெண்காரம் | ,, | 7 |
| காயம் | ,, | 5 |
| அபினி | ,, | 3 |

இவைகளை சாராயத்திலரைத்து இரண்டு துட்டெடை உண்டைசெய்து கொடுக்க ஏழுநாளைக்குள் கட்டி பழுத்துடைந்து கல்மிஷங்கள் வெளிப்பட்டுவரும் அவைகளை வெந்நீரால் நன்றாய்க் கழுவிப்போட்டு ஒருபிடி வேப்பங்கொழுந்தில் ஒரு துண்டு மஞ்சள் சேர்த்து நன்றாயரைத்துப் புண்ணின்மேற் பூசவேண்டும். இப்படி காற்பத்தைந்து நாளைக்கு பூச சொஸ்தமாகும்.

குதிரையின் முதுகுபாரிசங் கொஞ்ச மிழுத்தாப்போல் நடக்குமாகில் நீம்கமரி என்று பெயர்.

பக்குவம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | 3 |
| மைசாட்சி | ,, | 3 |
| வெந்தியம் | ,, | 1½ |
| ஆனிவிரை | பலம் | 6 |
| அதிமதுரம் | ,, | 6 |
| பூண்டு | ,, | 6 |

| | | |
|---|---|---|
| வெண்காரம் | தூளாம் | 3 |
| காயம் | ,, | 3 |
| கத்தரிக்காய் | சேர் | 1½ |
| பனைவெல்லம் | ,, | 1½ |
| உடும்பு | ,, | 1 |
| நெய் | ,, | 1½ |
| உளுத்தமாவு | ,, | 3 |

இவைகளில் முதலுடும்பையறுத்து அதின் வயிற்றிலிருக்குங் கல்மிஷங்களைப்போக்கி நெய்யி லரைவேகலாக பொரித்துக்கொண்டு பின்பு மற்ற சரக்குகளோடு பொரித்தநெய்யும் உடும்பையும் ஒன்றாய்ச்சேர்த்து நன்றாய்ப் பிசைந்து நாலுதுட்டிடை உண்டைசெய்து முதலிருபது நாளைக்கு இரண்டு வேளையுங் கொடுத்து பின்பு இருபதுநாளைக் கொரு வேளையாக கொடுக்க சொஸ்தமாகும்.

குதிரைக் கதிகமா யிடுப்பு பிடித்துக் கொண்டு நொண்டுமாகில்,

இடுப்பில் நாற்கோணமாய்ச் சூடுபோட்டு முன் னீம்கமரிக்குச்சொன்ன அவிழ்தத்தை முன்சொன்னதுபோலே கொடுக்க சொஸ்தமாகும்.

## குதிரை யிளைத்துப்போனலதுக்கு

மசாலா

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | விராகனிடை | 1 |
| ஓமம் | ,, | ½ |

| | | |
|---|---|---|
| சவுக்காரம் | ,, | 1 |
| பனவெல்லம் | ,, | 1 |
| அபினி | ,, | 1 |

இவையெல்லா மொன்ருய்ச்சேர்த்தரைத்து உண்டைசெய்து கொடுத்து வரவேண்டும். அமிழ்தங் கொடுத்தபின் குதிரையை உலாத்தியும் யாலீசு நன்ருய்க் கொடுத்துவரவேண்டும். அல்லாமலும் கொள்ளும் புல்லும் வழக்கப்படியே கொடுத்துவந்தால் இளைப்புதீர்ந்து குதிரை புஷ்டியாகும்.

## குதிரை நாளுக்குநாள் இளைத்துப்போனல் கொடுக்கும் மசாலா.

| | | |
|---|---|---|
| மைசாட்டி | சேர் | ½ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | ½ |
| குருசானிஓமம் | ,, | ¼ |
| மிளகாய் | ,, | ¼ |
| ஓமம் | ,, | ¼ |
| காட்டுச்சீரகம் | ,, | ¼ |
| கடுகுரோகணி | ,, | ¼ |
| கோஷ்டம் | ,, | ¼ |
| ஆளிவிரை | ,, | ¼ |
| வாய்விளங்கம் | ,, | ¼ |
| தெரிப்புள்ளபூண்டு | ,, | ½ |
| சவுக்காரம் | ,, | ¼ |
| பொரித்தவெண்காரம் | துலாம் | 8 |

இவைகளைப் பசுவின்பால் விட்டரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து இருபத்தோர் நாளைக்குக் கொடுக்க குதிரை புஷ்டியாகும்.

☞ குதிரை நாளுக்குநாளிளைத்து கொள்ளும் புல்லும் நன்றாய்த்தின்றமலுந் தண்ணீர் செவ்வையாய்க்குடியாமலு மிருக்குமாகில்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 2 |
| கடுகுரோகணி | ,, | 2 |
| கோஷ்டம் | ,, | 2 |
| சுக்கு | ,, | 2 |
| திப்பிலி | ,, | 2 |
| திப்பிலிமூலம் | ,, | 2 |
| காட்டுச்சீரகம் | ,, | 2 |
| வாய்விளங்கம் | ,, | 2 |
| காயம | ,, | ½ |

இவைகளைகாடியிலரைத்து இரண்டுதுட்டிடையுண்டைசெய்துகொடுக்க குதிரை நாளுக்குநாள் தணிவு கொடுத்துப் பசியுண்டாகி புஷ்டியாகும்.

பத்தீசாமசாலா

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | துலாம் | 2 |
| கடுகு | ,, | 2 |
| ஓமம் | ,, | 2 |
| காட்டுச்சீரகம் | ,, | 2 |
| பூண்டு | ,, | 2 |
| கருஞ்சீரகம் | ,, | 2 |
| சீக்காய் | ,, | 2 |
| மிளகாய் | ,, | 2 |
| கடுக்காய் | ,, | 2 |

| | | |
|---|---|---|
| தான்றிக்காய் | ,, | 2 |
| வெட்பாலையரிசி | ,, | 1½ |
| பூவரசங்கொட்டை | ,, | 1½ |
| வலம்புரிக்காய் | ,, | 1½ |
| கடுக்காய்ப்பிஞ்சி | ,, | 1½ |
| சஜுபித்ர | ,, | 4 |
| ஸ்ரீ ஸ்ரீபதிவெள்ளருகு | ,, | 4 |
| கழைக்கோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 4 |
| வசம்பு | ,, | 4 |
| கரியபோளம் | ,, | 1 |
| கடுகுரோகணி | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| திப்பிலிமூலம் | ,, | 1 |
| பேய்ச்சுரையின்விரை | ,, | 1 |
| பேய்பீர்க்கங்காய்விரை | ,, | 1 |
| பொரித்தவெண்காரம் | ,, | 1 |
| கறியுப்பு | ,, | 9 |
| புகையிலை . | ,, | 4 |
| கர்ப்பூர் | ,, | 4 |
| சுக்கு | ,, | 4 |
| மிளகு | ,, | 4 |

இவையெல்லா மொன்றாய்ச்சேர்த் திடித்துக் கொண்டு வேண்டியபோது நாலுதுட்டிடை சூரண மெடுத்து சாராயத்திற் கலந்து உண்டை செய்துக் கொடுத்து இரண்டு மூன்று நாளைக்குப்பின . முருங் கப்பட்டைச் சாற்றிலாவது காடியிலாவது சிறு பிள்ளை சிறு நீரிலாவது சேர்த்துக்கொடுக்கவும்.

கொள்-புல்-தின்னும்போதாவது தண்ணீர் குடிக்கும்போதாவது இரும்புமாகிற் கொடுக்குமசாலா

| | | |
|---|---|---|
| சுக்கு | துலாம் | 4 |
| திப்பிலி | ,, | 4 |
| திப்பிலிமூலம் | ,, | 4 |
| காட்டுச்சீரகம் | ,, | 4 |
| ஆளிவிரை | ,, | 4 |
| மிளகு | ,, | 4 |
| ஓமம் | ,, | 4 |
| வைம்சாட்சி | ,, | 3 |
| கருஞ்சீரகம் | ,, | 6 |

இவைகளை அரைவறுப்பாகக் கொண்டுதேன்விட்டரைத்து மூன்றுதுட்டிடையுண்டைசெய்துமூன்று நாளைக்கு இரண்டு வேளையுங் கொடுக்க சொஸ்தமாகும். இல்லாவிட்டால் இந்த உண்டையோடொருபிடி மூங்கில் இலை சேர்த்துக்கொடுக்க சொஸ்தமாகும்.

## வெய்யகாலத்திற் கொடுக்கும்

### குளிர்ச்சி மசாலா

| | | |
|---|---|---|
| கோஷ்டம் | துலாம் | 6 |
| மிளகு | ,, | 6 |
| சுக்கு | ,, | 4 |
| இந்துப்பு | ,, | 4 |
| பூண்டு | ,, | 4 |

இவைகளைத் தண்ணீர்விட்டரைத்து இரண்டுதுட்டிடை உண்டைசெய்து மூன்றுநாளைக்குக் கொடுக்க

வேண்டும். இப்படி செய்துவந்தால் குதிரைக்குச் சூடில்லாமல் எப்போதும் குளிர்மையாகவே யிருக்கும் பத்தியமில்லை,

குதிரை மதத்தினு லடிக்கடி கனைத்துக்கொண்டு மடிக்கடி இந்திரியத்தை வெளிப்படுத்திக் கொண்டு மிருந்து அதினுலிளைத்துப்போகுமாகில்,

பக்குவம்

| | | |
|---|---|---|
| வாழைக்கிழங்கு | சேர் | 1 |
| எலுமிச்சம்விரை | ,, | முக்கால் |
| கந்தக்காம்பு | ,, | அரை |
| வெள்ளெருக்கன்பூ | ,, | $\frac{1}{4}$ |

இவைகளையரைத்துவிளாங்காய்ப்பிரமாணம்உண்டைசெய்து ஏழுநாளைக்குக் கொடுக்க வேண்டும். அல்லாமலும் சினைத்துக்கும் பீசத்துக்கு மிடையிலிருக்கும் நரம்பிற் சூடுபோடவேண்டும். இதில் சொஸ்தப்படாவிட்டால் (பங்குடிகீறு) கொண்டுவந்து புகைகாட்ட மதமெடுபட்டுப் போகும்.

## குதிரை மாதவனைக்கண்டால்

### இச்சிக்க மசாலா

| | | |
|---|---|---|
| மிளகு | தலாம் | 2 |
| மஞ்சள் | ,, | 2 |
| கோஷ்டம் | ,, | 2 |
| பேரீச்சங்காய் | ,, | 2 |
| மைசாட்சி | ,, | 1 |
| வெல்லம் | ,, | 1 |

| | |
|---|---|
| காயம் | விராகனிடை 1 |
| கோழிமுட்டை | 6 |

இவைகளை யரைத்துப் பொடிசெய்து முட்டையிற்கலந்து மூன்றுண்டைசெய்து மூன்றுவேளை கொடுக்க இச்சையுண்டாகும்.

## மாதவான் குதிரையைக்கண்டால்

### இச்சிக்கு மசாலா

| | | |
|---|---|---|
| கடுகுரோகணி | துலாம் | 3 |
| பஞ்சள் | ,, | 2 |
| மைசாட்சி | ,, | 1 |
| காயம் | ,, | 1 |
| கத்தரிக்காய் | சேர் | அரை |

இவைகளில் கத்தரிக்காய் தவிர மற்றவைகளைப் பொடிசெய்து கத்தரிக்காய்க்குள் வைத்து நெருப்பில்வேவித்து மூன்றுநாளைக்குக்கொடுக்க பெண் குதிரை தற்செயலாய் மோகித்து மேல்விழும்.

குதிரைக்கு கால்களிற் கட்டியைப்போலெழும்பி யதினல் நொண்டுமாகில்.

### பக்குவம்

முதலந்தக் கட்டிகளிற் பொத்தல்செய்து அதுக்குள்ளிருக்குஞ் சீழ் இரத்த முதலியவைகளைப்போக்கிப் பின்பு சவுக்கார்-சாஜீக்கார் இவையிரண்டையும் புளியிற்கரைத்து கட்டிமேற் பூசவேண்டும். அல்லாமலும்,

| | |
|---|---|
| இந்துப்பு | விராகனிடை 9 |
| பூண்டு | 9 |

| | | |
|---|---|---|
| சுக்கு | ,, | 9 |
| வாய்விளங்கம் | ,, | 9 |
| ஓமம் | ,, | 18 |
| வெல்லம் | சேர் | 1 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்துக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

குதிரையின் குளம்புக்குள்ளிருக்கு மாமிசமெல்லாமழுகி சேதப்பட்டு அதினால் சீழோடிவருமாகில்

பக்குவம்

| | |
|---|---|
| அரப்பொடி | விராகனிடை 9 |
| கடுக்காய் | ,, 9 |

இவை நல்லெண்ணையில் நன்றாயரைத்து பற்று போட்டு அதின்மே லாமணக்கிலையைக்கட்டி பின்பு செங்கல்லை எருமுட்டை நெருப்பிற்சுட்டு நோயுள்ளவிடங்களி லொத்திடவேண்டும்.

அல்லாமலும்,

| | |
|---|---|
| பூண்டு | விராகனிடை 9 |
| கற்கண்டி | ,, 9 |
| இந்துப்பு | ,, 9 |
| ஓமம் | ,, 18 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்துக் கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

ஷை வியாதிக்கு வேறு பக்குவம்

முத்துச்சிப்பி சுண்ணாம்பையும், பழுத்துக் கீழே விழுந்தபோன கள்ளிக்கொம்பு சுட்ட சாம்பலையும்

பசுநெய்யிற்கலந்து புண்மேற்பூச சொஸ்தமாகும். இந்த அவிழ்தம் (சக்கரே யவ்வலென்னும்) வியாதி யையுங் கண்டிக்கும்.

குதிரையின் கால்கள்வீங்கி நடக்கும்போது சிட்டுசிட்டென்று சத்தம் வருமாகில்,

பக்குவம்

முதல் குதிரையின் காற் பெருநரம்புக்குப் பக்கத்தில் இருக்கும் சிறுநரம்புகளிற்குத்தி இரத்தம் வாங்கிப்பின்பு,

| | | |
|---|---|---|
| வேப்பிலை | விராகனிடை | 9 |
| பால் | ,, | 9 |
| கடுக்காய் | ,, | 9 |
| ஆவாரம்பட்டை | ,, | 9 |
| நெய் | சேர் | 1 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்துக் கொடுக்கவும். அல்லாமலும் இப்படியே ஏழுநாள் வரையில் நரம்புகளில் இரத்தம் வடிந்தபின்பு ஒரு சீலையிற் சாம்பற்போட்டு நரம்பின்மேல் வைத்துக் கட்ட சொஸ்தமாகும்.

குதிரையின் தேகமெங்கும் கட்டிகளெழும்பி அதனால் இரத்தம் வடியுமாகில்,

பக்குவம்

அடுப்பங்கரையில் அதிகமாய்ப் புகைபடைந்திருக்கு மொட்டடை கொண்டுவந்து எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து சிறங்கின்மேற்பூசி பின்பு,

| | | |
|---|---|---|
| இந்துப்பு | விராகனிடை | 9 |
| கடுக்காய் | ,, | 9 |
| பூண்டு | ,, | 9 |
| வாய்விளங்கம் | ,, | 9 |
| ஓமம | ,, | 18 |
| நெய் | சேர் அரிக்கால் | |

இவ்வயெல்லா மொன்றாய்ச் சேர்த்து மூன்று நாளைக்குக்கொடுக்க சொஸ்தமாகும்.

### தாசாமசாலா

குதிரை யிளைத்தும் பலவின முள்ள தாயு மிருந்தால் அப்படிப்பட்ட குதிரைக்கு தாகவாகும்பொருட்டு செய்யு மசாலா விபரம்.

1-வது பக்குவம்

| | | |
|---|---|---|
| விரையில்லாத கத்தரிக்காய் | பலம் | 14 |
| மஞ்சள் | ,, | 14 |
| வெல்லம் | ,, | 14 |
| நெய் | ,, | 14 |

இவைகளை நன்றாயிடித்து நெய்யை விட்டுப்பிசைந்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து காலையில் மாத்திரங் கொடுத்துவரவும் இப்படி இருபது நாளைக்குக்கொடுக்க குதிரை தணியும். பத்தியமில்லை.

2-வது பக்குவம். சிறுகீரைபசித்து புண்ணாக்கில் கலந்து கொடுக்கவும்.

3-வது பக்குவம். திருவினதேங்காய்ப்பூ நல்ல வெல்லம் இவை யிரண்டையும் பிசைந்து உள்ளுக்கு கொடுக்கவும்.

4-வது பக்குவம். வேவித்த பச்சைப்பயறும வெல்லமும் பிசைந்து கொடுக்கவும்.

5-வது பக்குவம் அவலைப் பசும்பாலி லூரவைத்து ஊறின்பின் உள்ளுக்குக் கொடுக்கவும்.

6-வது பக்குவம். சிறுதரைக்கீரையை யவித்துக் கொடுக்கவும். இவ்வாறுவிதங்களில் ஏதாவதொரு முறை மேற்கண்ட தவணை அரைமண்டலம்வரை யில் காலைமாலை கொடுத்துவந்தால் நீடிய வயதுசென்ற யினைத்தகுதிரையுங் குட்டி குதிரையாகிவிடும்.

## இரைப்புகண்ட குதிரைக்கு

### பக்குவம்

| | | |
|---|---|---|
| செருப்படியிலை | படி | 1 |
| மிளகு | துளாம் | 3 |
| வெள்ளைப்பூண்டு | ,, | 3 |

இவை மூன்றையுந் துவைத்து உள்ளுக்குக்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

## காற்குளம்புக்கு ஒத்தடம்

### பக்குவம்

மண்வெட்டியைக் காயவைத்து மஞ்சள் சுண்ணும்பு இவை இரண்டையுந் தண்ணீரிற் கரைத்துக் கொண்டு குதிரையின் குளம்பை காயவைத்த மண்வெட்டியின்பேரில் வைத்து மேற்படி தண்ணீரை தெளித்துவர சொஸ்தமாகும்.

குதிரைக்கு காலிலே இரத்தமிரங்கினதற்கும், இடுப்பிலே வலியுண்டாயிருப்பதற்கு மருந்து.

குங்கிலியம் சேர் இரண்டரை
நல்லவெல்லம் ,, இரண்டரை

பாதிபொரித்துக்கொண்டு பாதிபச்சையாக சேர்த்துக்கொண்டு இம்மூன்றுவகையும்நன்றுஇடித்துக்கொண்டு முப்பது உண்டைபண்ணி காலையுமாலையுமொவ்வொரு உண்டைகொடுத்துக்கொண்டு வரவும் சொஸ்தமாகும் பத்தியமில்லை.

ஆனால் மூன்றுமாதம்வரையில் குளிர்ந்தசலத்தில் குதிரையைக் கழுவக்கூடாது.

குதிரை தண்ணீர்குடித்தவுடனே திடீரென்று விழுகிறது மெழுந்திருக்கிறதுமாக விருந்தாலும் அட்டை வயிற்றுக்குட் புகுந்திருந்தாலும்,

பக்குவம்

இரண்டு புகையிலையும் ஒருவிளாங்காய்ப் பிரமாணம் புளியும் வைத்துக்கொண்டு முந்தி புகையிலையைமெய்த்து பின்பு புளியைக்கொடுக்க வியாதி நீங்கும்.

குதிரைக்கு எந்தகவாளம் போட்டாலுமுலர்ந்து போகிற குதிரைக்கு,

பக்குவம்

சித்தாமணக்கொட்டையை வேகவைத்து உலர்த்திக்கொண்டு எண்ணெயூத்தி ஓர் சுத்தமானபாண்டத்தில் வைத்துக்கொண்டு அந்த எண்ணெயைகொள்ளில் கால்சேர் பிரமாணமத்தித்து 16-நாளைக்கும் அரைசேர்பிரமாணம் 4(-நாளைக்கும், ஒருசேர் பிரமாணம் 8-நாளைக்கு மேய்த்துவரவும் குதிரை நன்றாய்த்தேறிவரும் கொள்ளுகட்டுகிறதற்குமுந்தி சாமகோரக்தேய்த்து தாசாகொடுத்து பிறகு கட்டவும்.

{ அரூமிபண்ணுகிற குதிரைக்கு கடிவாளத்திலே பூசுகிறதற்கு ஓர்வித=கைகண்ட முறை }

நொருங்கின வளையலை கொண்டுவந்து பொடி செய்து எலுமிச்சம்பழச்சாற்றிலே குழப்பி கடிவாளத்திலே கனமாகத்தடவி அதை தலைமயிரினாலே சுற்றி எலந்தைக்கட்டை கரிபண்ணி அந்தக் கரி நெருப்பில் கடிவாளத்தை நன்றாய்க் காய்ச்சி எலுமிச்சம் பழச்சாற்றிலே போட்டு கடிவாளத்தை தேய்த்து அரூமிக் குதிரைக்குப் போடவுஞ் சாதுவாகும்.

குதிரை மழையிலே நனைந்து வயிறாதிக்கொண்டு கால்கள் கொறுக்கை வலித்துக்கொண்டு மிதிக்கிறதற்கு.

பக்குவம்

| | | |
|---|---|---|
| புகையிலை | பலம் | 1 |
| சுக்கு | விராகனிடை | 9 |
| மிளகு | பலம் | 2 |

இவை மூன்றையு மொன்றாக பொடிசெய்து குதிரைக்கு மேய்த்து தாசாகொடுத்து வைக்கவும், இந்த மருந்தை கொடுத்தவுடனே நடுக்கலுண்டாகும் அந்தக்குறி கண்டவுடனே சொஸ்தமானதென்றறிய வேண்டியது.

குதிரைக்கு சற்பாதிரோகம் வந்தால் அடிவயிறு வீங்கும் நாலுகாலும் முகமும் வீங்கிக்காணும்.

முந்தி பேதிக்குக் கொடுத்து இரண்டுநாட் பொறுத்து மஞ்சள் சேர்-1¼, பொடிபண்ணி குக்கிலம் விராகனிடை-9, கூடப்போட்டு வெள்ளாட்டுக் கோமியம் விட்டுப் பிசைந்து காலையிலு மாலையிலும் 7-நாள் 14-பொழுது கொடுக்கவும். ஒருநேரம் வெந்

நீர் காட்டவும் வியாதிதீரும் கொள்ளு நிறுத்தி வைத்தா லுத்தமம்.

குதிரையின் முகம் வீங்கி உபத்திரவப்படுமாகில்

பக்குவம

கடுகு
மஞ்சள்
இந்துப்பு
சவுக்காரம்

இவைகளைப் புளிசேர்த் தரைத்து குதிரையின் முகத்திற்பூசி ஒருமெல்லிய சீலையாற்கட்ட சொஸ்த மாகும்.

குதிரையின் தேகமெல்லாம் முடிச்சு முடிச்சாய்க் கட்டிகளெழும்பி அதனால் சீழ்வெளிப்படுமாகில்,

பக்குவம்

முதல் தேகமெல்லாம் நெய்யும் நல்லெண்ணெ யுங் கலந்து நன்றாய்ப்பூசித் தேய்த்து பின்பு நொச்சி யிலையைப் பானையில் வேவித்து அதின்மேற் றேய்த் துப் பின்பு,

| | | |
|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 9 |
| வாய்விளங்கம் | ,, | 9 |
| ஆதா | ,, | 9 |
| வசம்பு | ,, | 9 |
| பூண்டு | ,, | 6 |
| ஓமம் | ,, | 18 |
| நெய் | சேர் | 1 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்து மூன்று நாளைக்குக்கொடுக்க சொஸ்தமாகும் பத்தியமில்லை.

குதிரையின் காற்களில் எலும்புபோற் புறப்படுமாகில் (ஆடா) என்று சொல்லவேணும் முன்னடி கண்டிருக்கும் (ஆடா) என்றும் வியாதியிற் சேர்க்கலாம்.

பக்குவம்

வேப்பிர்க்கை கற்றையாகக் கட்டிக்கொண்டு சட்டிடை அடுப்பில்வைத்து சட்டி நன்றாய் சூடேறின பின்பு ஷை கற்றையைச் சட்டியில் நன்றாய்த் தேய்த்து சூடேறின பின்பு காலெலும்பில் நன்றாய்ச் சுடும்படியாய் ஒத்திட்டு பின்பு ஷை யிடத்தை கத்தியினாற் பிளந்து இரத்தமெடுத்து பின்பு,

நேர்வாளக்கொட்டை
நவாச்சாரம்
இந்துப்பு

இம்மூன்றையுஞ் சரியிடையாகச்சேர்த்துஎலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து ஷை யிடத்திற்பூசி ஒரு சீலையால் 7-நாளைக்குக் கட்ட சொஸ்தமாகும்

2-வது, பக்குவம்

| | | |
|---|---|---|
| வெள்ளைப்பாஷாணம் | விரானிடை | 6 |
| சாதிலிங்கம் | ,, | 6 |
| வெங்காரம் | ,, | 12 |
| கந்தக்காம்பு | ,, | 12 |

இவைகளை இஞ்சிசாற்றில் நன்றுபரைத்து இருபத்தோருண்டைசெய்து தினமோருண்டை பனைவெல்லத்திற்சேர்த்துக்கொடுக்க மோதநிரு (ஆடா) முதலிய வியாதிகளெல்லாஞ் சொஸ்தமாகும்.

இந்த அவிழ்தங் குதிரைக்கடிக்கடி கொடுத்து வந்தால் ஒரு வியாதியு மணுகாது.

குதிரையின் வால்மயிரும் அயால் மயிருமுதிர்ந்துபோய் வளராமலிருக்குமாகில்,

பக்குவம்

காய்ந்த தவளைச் சுட்ட சாம்பலையும் விளக்கின் மஷ்டையும் சரியிடையா யெடுத்துக்கொண்டு விளக்கெண்ணெயிற்குழப்பி 7-நாளைக்குப்பூச மயிர்வளரும்.

குதிரையோடும்போது மூலம்வெளிப்படுமாகில்

பக்குவம்

| | | |
|---|---|---|
| பொரித்தவெண்காரம் | துட்டிடை | ½ |
| கஞ்சா | ,, | ½ |

இவைகளில் முதல் கஞ்சாவை செத்தை குப்பையில்லாமற்பொறுக்கி வறுத்துக்கொண்டு வெண்காரத்துடன் சேர்த்துப் பொடிசெய்து மூலம் வெளிப்படும்போது அதின்மேற் பொடியைத் தேய்க்க மூலம் உள்ளடங்கிப்போகும்.

## பரசாத்திக் கவிழ்தம்

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெ | சேர் | 3 |
| தயிர் | ,, | 1 |
| வேப்பிலைச்சாறு | ,, | ½ |
| உளுந்து | ,, | 1 |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்து அடுப்பின்கீழே 7-நாளைக்குப் புதைத்துவைத்து

பின்பு இரண்டுகாண்டிப் பிரமாணமெடுத்து கோது மை மாவிற்கலந்து அதிகாலையில் 1¼-நாளைக்குக் கொடுக்க சொஸ்தமாகும்.

## சாகினி

### பசியில்லாமல் மெதுவாய் தீனி தின்பதற்கு மருந்து

| | | |
|---|---|---|
| மஞ்சள் | சேர் | 1 |
| மைசாட்சி | ,, | ¼ |
| மிளகு | ,, | ¼ |
| குருசானிஓமம் | துலாம் | 8 |
| ஓமம் | ,, | 4 |
| ஆளிவிரை | ,, | 4 |
| கோஷ்டம் | ,, | 4 |
| வெட்பாலையரிசி | ,, | 4 |
| பூண்டு | ,, | 4 |
| வாய்விளங்கம் | ,, | 4 |
| கருஞ்சீரகம் | ,, | 4 |
| இந்துப்பு | ,, | 8 |
| வெண்காரம் | ,, | 8 |
| காயம் | ,, | 2 |
| நெய் | சேர் | ¼ |
| கோதம்பைமாவு | ,, | ¼ |

இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்தரைத்து மூன்று துட்டிடை உண்டைசெய்து இரண்டுவேளை யுங்கொடுக்க பசி யதிகரித்து நாளுக்குநாள் குதிரை யதிக புஷ்டியாகும் இதிலதிக சுகங்காணாவிட்டால்,

2-வது முறை

| | | |
|---|---|---|
| மஞ்சள் | துலாம் | 3 |
| மிளகாய் | ,, | 3 |
| மிளகு | ,, | 3 |
| கடுகு | ,, | 3 |
| வாய்விளங்கம் | ,, | 3 |
| மைசாட்சி | ,, | 3 |
| திப்பிலிமூலம் | ,, | 3 |
| சறுயித்தா | ,, | 3 |
| கருஞ்சீரகம் | ,, | 6 |
| கடுகுரோகணி | ,, | 6 |
| கழைக்கோட்டிக்காய்ப்பருப்பு | ,, | 5 |
| புகையிலை | ,, | 5 |
| பொரித்தவெண்காரம் | ,, | 2 |
| அபினி | ,, | 1 |

இவைகளை சாராயம் விட்டரைத்து மூன்று அட்டிடை உண்டைசெய்து 19-நாளைக்கு கொடுக்க குதிரை புஷ்டியாகும் கைகண்டமுறை.

குதிரைபுஷ்டியாகி யதிகபலமுண்டாகக்கொடுக்கும்

## தி வா லா

| | | |
|---|---|---|
| உருமஸ்தகி | துலாம் | 2 |
| சாலம்மிசிரி | ,, | 2 |
| சாதிக்காய் | ,, | 2 |
| காயத்ரி | ,, | 2 |
| அதிமதுரம் | ,, | 2 |

| | | |
|---|---|---|
| வாலுளுவையரிசி | ,, | 2 |
| இராம்பு | ,, | 2 |
| சிற்றரத்தை | ,, | 2 |
| கருவாப்பட்டை | ,, | 2 |
| பேரீச்சங்காய் | ,, | 7 |
| திராட்சிப்பழம் | ,, | 7 |
| கஸகஸா | ,, | 7 |
| வெள்ளரிவிரை | ,, | 7 |
| சிறுகாஞ்சிவிரை | ,, | 7 |
| முள்ளங்கிவிரை | ,, | 7 |
| ஓமம் | ,, | 7 |
| நாய்கடுகு | ,, | 7 |
| குருசானியோமம் | ,, | 7 |
| பூவரசன்பிசினி | ,, | 3 |
| செரிஞ்சிக்காய் | ,, | 3 |
| விளாம்பிசினி | ,, | 3 |
| தேங்காய் | ,, | 8 |
| சீரகம் | ,, | 2 |
| வாதுமைக்கொட்டை | பலம் | 10 |
| வால்மிளகு | தலாம் | 4 |
| ஏலம் | ,, | 4 |
| மகிழன்விரை | ,, | 3 |
| அக்கிவிரை | ,, | 3 |
| பாதம்பசினி | ,, | 3 |
| சருக்கரை | சேர் மூன்று | |

| | | |
|---|---|---|
| நெய் | ,, | 2 |
| தேன் | ,, | 1 |
| கோதுமைமாவு | ,, | 4 |

இவைகளை வஸ்திரகாயஞ்செய்து சர்க்கரை பாகுகாய்ச்சி பதத்தில் வஸ்திரகாயத்தைப்போட்டு இலேகியமாய்க் கிண்டி வைத்துக்கொண்டு நிதம் ஆறுதுட்டிடை உண்டைசெய்து நாற்பதுநாளைக்குக் கொடுக்க குதிரை நன்றாய்ப் புஷ்டியாகி மினுமினுப்புண்டாகி தேவேந்திரன் அயிராவதத்துக் கொப்பென விருக்கும்.

குதிரைகளெப்போதும் புஷ்டியாய் யொருவித நோயண்டாமல் அதிக சுறுசுறுப்பாயும் நல்லநடத்தையாயு மிருப்பதற்கு,

## குதிரைகளை வைத்திருக்கும்

### முறைகள்

1. இலாயம் அல்லது கட்டுத்தறி அதிக சுத்தமாயும் இலத்திமுதலிய துற்கந்தங்களில்லாமல் அடிக்கடி சுத்தஞ்செய்யவேண்டும்.

2. கொள் புல் தண்ணீர் வேளை தப்பாமல் பக்குவமாய்க் கொடுத்துக்கொண்டு வரவேண்டும்.

8. குதிரையின் கைகால் முதலியவைகளையெல்லாம் நன்றாய்ச்சொரிந்துவிட்டு தேகத்திலுள்ள உமீராமங்கள் நன்றாயுதிரும்படி அந்திசந்தி இரண்டுவேளையும்

வேளைபொன்றுக் கிரண்டுமெனி நேரத்துக்கு குறை யாமல் ம்ராலீச கொடுக்கவேண்டும்.

4. குதிரையின் தேகத்தில் மழைச்சாரல் பனி குளிர்ந்தகாற்று முதலியவைகள் படாமல் எப்போ தும் புறக்காவினுல் மூடிவைக்கவேண்டும்.

5. குதிரையை பதினைந்து நாளைக்கு ஒரு விசை கடலிலாவது உப்பளுற்றிலாவது நீந்தவிட்டு வெந்நீரால் குளிப்பாட்டி வரவேண்டும்.

6. குதிரை வயிற்றில் கட்டுசேராமல் அடிக் கடி பேதிக்குக் கொடுத்து காலத்துக்குத் தகுந்த படி மசாலா கொடுத்துவரவேண்டும்.

7. குதிரையின் படுக்கை மேடுபள்ள மில்லா மல் காய்ந்த வைக்கோலை கற்கட்டிகள் இல்லாமற் பொறுக்கிப்போட்டு உதரிவைக்கவேண்டும்.

குதிரை கட்டுமிட மசுத்தமா யிருப்பதாலும், குளிர்ந்தநீரிற் குளிப்பாட்டுவதினுலும், கோன் கொடுத்தவுடனே சவாரிசெய்வதினுலும், சவாரி செய்த வியர்வை காயுமுன் தண்ணீர் காட்டுவதி னுலும், அதிக சவாரி செய்வதினுலும், வெய்யல்-கானல்-குளிர்ந்தகாற்று-மழைசாரல் - பனிச்சாரல் முதலியவைகளி லடிபடுவதினுலும், சவாரிசெய்து காலாறுமுன் கட்டி வைப்பதினுலும், துஷ்டகுதி ரைகளோடு சேர்த்துக் கட்டிவைப்பதினுலும், குற்ற மில்லாமல் தண்டிப்பதினுலும், கையறியாதவன்

சவாரி செய்வதினாலும், குதிரை மனதைக்கைவசப் படுத்தாததினாலும் இன்னம் இதைப்போலொத்த காரியங்களாற் குணபேதப்பட்டு வியாதியண்டி கொஞ்சகாலையிற் கெட்டுப்போகும்.

ஆகையால், பெண்களின் சுபாவமெப்படியோ அப்படியே குதிரைகளின் சுபாவமென்றெண்ணி பெண்களை வசப்படுத்தி தனக்குள் அடக்கி ஆள்வ தற்கு எப்படி இலகு பிகு உபாயபட்சம் நகைப்பு நட்பு முதலியவைகளைச். செய்யவேண்டியதோ அப்படியே குதிரைகளுக்குஞ் செய்து வசியப் படுத்தி தனக்குள் அடக்கி ஆண்டுவரவேண்டும் சுபம்.

## கவனிப்பு

சுழி இலக்கணத்திலுஞ் சுபாவிர்த்தபலன் அசு பாவிர்த்தபலன் இம்மூன்று பாகங்களிலும் குதிரை பார்க்கவேண்டிய சுழி சுத்த முதலியவைகளை விபர மாக எடுத்துரைத்து இருந்தாலும் இதனடியிற்கண் டிருக்கும் இலட்சணங்களையும் கவனமாய்ப்பார்த்து குதிரை விலைக்குக் கொள்ளவேண்டியது அவசிய மாதலால் இக்குறிகளையுங் கண்ணோட்டத்துக்குக் கொண்டு வருவீர்களாக.

## துன்பத்தைத்தருகின்ற சுழிகள்

சந்திரச் சுழிகளும் அண்டாவர்த்த மென்னுந் தண்டை யடியிலிருக்கிற சுழிகளும், உடலிலொரு

பக்கத்தில் இருக்கின்ற சுழியாகிய கௌவகமும் காவர்த்தமும் மேன்மையாக விளங்கிய முன் வளைச் சுழியும், பரவிய செழுமையுள்ள கேதாரிச்சுழியும், காலிலிருக்கின்ற பிரயோசனமில்லாத கொடிய சுழியாகிய கேசாவர்த்தமும், பொலிவோடுங்கூடிய கச்சையிலேயிற் பட்டாடையாகச் சொல்லப்பட்ட சுழியும் ஆகிய இவ்வெட்டுச் சுழிகளுமுடைய குதிரைகளை வாங்கும் பிரபுக்களுக்கு பலவாறுந் துன்பத்தையேதரும் ஆதலால் இச்சுழிகள் பொருந்தாது என்றறிக.

## நன்மையைத்தருஞ் சுழிகள்

1. நீண்டு அல்லது முறுக்கியகாதும், மூன்றுகால் வெளுத்து ஒருகால் கறுத்தும், மூன்றுகால் கறுத்து ஒருகால் வெளுத்தும், கண்கள்வெளுத்துத் தீனி குன்றுமையும் வெம்புகின்ற தீமையுடையமாய ருத்திரனைப்போலும் நீலகண்டமும், பீஜமில்லாமையும், ஏறக்குறைய விருக்கும் பெரியபீஜமும், செவ்வையாகிய பதுமையும், அக்கினியும், சித்திரமும்போல் அசைவில்லாமலும், முகம், வால், நான்குகாற்கள் இவைகளிற் சுழியில்லாமையும் எனப் பூலோகத்தார் சொல்லிய குற்றங்களில்லாமல் கழுத்தடியின் மார்க்கண்டம் இரட்டையாய் இராமலும் இருக்கவேண்டும்.

2. சிரசிலிரண்டு சுழியும், செழுமையுள்ள நாபியிலே நான்கு சுழியும், சிறந்தமார்பிலே இரண்டு சுழியும், நெற்றியிலே ஒருசுழியும், உட்கட்டியிலே

ஒருசுழியும், ஆகிய சுழிகள் பத்துங்குறையாமல்நரி-பூனை-கரியகாக்கை - பேய்-ஓரிநாய்-செழுமையுள்ள பன்றி இவைகளுடைய சத்தமில்லாதவைகளாய்ப் பெரிய அலையையுடைய கடல்-மேகம்-சங்கம் - இடபம்-பேரிகை இவைகளைப்போல சத்தமுடையன வாயு மிருக்கவேண்டும்.

3. அதிக கோபத்துடன் பகைக்கின்ற புலி-கரடி-கழுதை-செந்நாய்-ஒளியையுடைய பூனை - நரி தரிக்கப்பெற்ற கரியகாகம்-தீ - புகை இவைகளினுடைய நிறத்தைப் பொருந்தாதவைகளாய் இருமாப்புடையனவாய்வாயுவென்னும் வேகத்தோடுங்கூடிப் பிரகாசித்த கிரணங்களையுடைய வெள்ளிய முத்துக்கள் சந்திரன் நீலரத்தினம் மெல்லிய தாமரையினுடைய மகரந்தம் செழுமைபொருந்திய பொன்காயா செவ்வரத்தமலர் நல்ல பச்சைக்கிளியாகிய இவைகள்போல அமைந்த உருவத்தையுடையனவாயு மிருக்கவேண்டும்.

4. நெற்றி பரந்து உயர்ந்தமேலுதட்டையுடையவாய்வெண்ணிற நிறைந்து தம்மிலேவரிசையாய் ஒத்துப்பிரகாசிக்கப்பெற்ற பற்களையுடையவாய் நிறைந்தநல்ல வாசனை சிறந்து, நாக்கும் மாவினிளந்தளிர் போலுஞ் செம்மைநிறம்பொருந்தி இரண்டிமைமயிருந் திரட்சியுடையவாய் உக்கிரமாகிய கண்பார்வையுடையவாய் தேகத்தில் அதிக மாமிசமில்லாமல்உள்ளே வளைந்து முக்கோணமாய் பிரகாசிக்கும் முகத்தையுடையனவாயு மிருக்கவேண்டும்.

5. கழுத்துமயிரும் தலைமயிரும் ஒருநிறமாய் மார்பினுடனே கண்டமும் பாம்பின் படம்போலொத்துச் சங்குகள்போலத் தொனியுண்டாய்க் குவிந்து உள்வாங்கி மண்டலஞ் செய்வனவாய் வலிமைகொண்ட குளம்புடையவாய்க் கிளைகொண்ட நரம்புகள் மறைந்து தசையையுடையவாய்ப் பிரகாசிக்கின்ற முழங்கால் நெளித்தலில்லாமல் நெளிப்பாகிய முதுகும் பருத்த துடைகளுந் திரண்டு தண்டைக்காலானது நீண்டு மெதுகுள்ள நிறத்தையுடையனவாயும் இருக்கவேண்டும்

6. நான்குகாற்களும் நெற்றியும் ஒக்க வெளுத்திருக்குமாகில் பஞ்சகல்யாணி சொன்ன விலைகொடுத்து கொள்ளவும்.

7. மங்களானென்றும், சாரங்கனென்றும், கல்காநீலனென்றும், மௌவழகனென்றும், கொங்காளனென்றும், சன்னசம்பானென்றும், குங்குமச்சேரனென்றும், கரியானென்றும், நீலனென்றும், சாரனென்றும், விளங்கிய மள்ளானென்றும், உரஞ்சிவந்தானென்றும், நல்லானென்றும், பொல்லானென்றும், கருங்காற் சம்பானென்றும், பலநிறத்தையுமுடைய சாதிகுதிரைகள் இவைகளென்றறிக.

அசுவ சாஸ்திரம்

முற்றிற்று.

---



## கனவின் பலாபலன்கள்

# விளக்க சாஸ்திரம்

இவை

ஜோதிட வல்லவரும் வித்வானுமாகிய

**T. C. P. சாரதி அவர்கள்**

எழுதியது.

★

[இதில் கனவின் நன்மை தீமைகளைக் காட்டி அதன் பலாபலன்களை மிகவும் தெளிவாய் விளக்கி அச்சிட்டிருக்கிறது.]

**இதன் விலை ரூபா 1**

தெய்வமகள் பதிப்பை கவனித்து வாங்கவும்.

★

விலாசம்:

**அ. குழந்தைவேல் முதலியார்,**

தெய்வமகள் விலாசம் பிரஸ்

நெ. 24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை-1.

